

# தொழுகையும் அதன் சட்டங்களும்

மேன்மைமிகு ஷைக்
அப்துல் அஜீஸ் பின் அப்துல்லாஹ் பின் பாஸ் (ரஹ்)

மேன்மைமிகு ஷைக்
முஹம்மத் பின் ஸாலிஹ் அல் உஸைமீன் (ரஹ்)

தமிழில்
K.J. மஸ்தான் அலி பாகவி, உமரி (அபூ காலித்)

TAMIL 1301019

THE COOPERATIVE OFFICE FOR CALL & GUIDANCE AT AL-SULAY, RIYADH
P.O.BOX 1419 ZIP CODE 11431, TEL.NO (01) 2410615 -FAX (01) 2414488-232
E.mail : sulay5@hotmail.com

# தொழுகையும் அதன் சட்டங்களும்

மேன்மைமிகு ஷைக்
அப்துல் அஜீஸ் பின் அப்துல்லாஹ் பின் பாஸ் (ரஹ்)

மேன்மைமிகு ஷைக்
முஹம்மத் பின் ஸாலிஹ் அல் உஸைமீன் (ரஹ்)

தமிழில்
K.J. மஸ்தான் அலீ பாகவி, உமரி (அபூ காலித்)

\


ح مكتب دعوة وتوعية الجاليات بعنيزة ، ١٤١٨هـ

فهرسة مكتبة الملك فهد الوطنية أثناء النشر

ابن باز ، عبدالعزيز بن عبد الله

رسائل في الطهارة والصلاة / عبدالعزيز بن عبد الله بن باز ، محمد بن صالح العثيمين - عنيزة .

٧٢ ص ؛ ١٢ × ١٧ سم

ردمك : X - ٢٦ - ٧٨٣ - ٩٩٦٠

(النص باللغة التاميلية)

١ . العبادات (فقه إسلامي)  ٢ . الوضوء  ٣ . الصلاة

أ . العثيمين ، محمد بن صالح (م . مشارك)  ب . العنوان

ديوي ٢٥٢  ١٨/٠٧٠٦

رقم الايداع ١٨/٠٧٠٦

ردمك : X - ٢٦ - ٧٨٣ - ٩٩٦٠




**NOT FOR SALE**


**First Edition : 1994 (November)**



Authors: **Abdul Azeez Bin Abdullah Bin Baz**
**Muhammed Bin Salih - Al Udhaimin**



Translated by: **K.J. Masthan Ali, Baqavi, Umari (Abu Khalid)**
Co-ordinated by **ISLAMIC FOUNDATION TRUST**
**Madras - 12, Phone : 642 4401**

Typesetted by: **Al-Jannath Lasers, Madras** 600 001. ✆ 512644

Printed in India by **Offset at Hindustan offset, Madras - 14**

# பொருளடக்கம்

# பொருளடக்கம் المحتويات

بسم الله الرحمن الرحيم

# كيفية صلاة النبي ﷺ

## لسماحة الشيخ عبد العزيز بن عبد الله بن باز رحمه الله

# அண்ணல் நபி (ஸல்) அவர்களின் தொழுகை முறை

அண்ணல் நபி (ஸல்) அவர்களின் தொழுகை முறை பற்றி விளக்குவதே இந்தச் சிற்றேட்டின் நோக்கமாகும். நபி (ஸல்) அவர்கள் தொழுததுபோன்று தொழுகைகளை நிறைவேற்ற விரும்புகிற முஸ்லிமான ஆண், பெண் அனைவருக்கும் இதனை நான் வழங்குகிறேன்.

ஸஹீஹுல் புகாரி எனும் நபிமொழித் தொகுப்பில் நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அறிவிக்கப்பட்டுள்ளது:

قَالَ النَّبِيُّ ﷺ : صَلُّوا كَمَا رَأَيْتُمُونِي أُصَلِّي (رواه البخاري)

"நான் எவ்வாறு தொழுதிடக் கண்டீர்களோ அவ்வாறே நீங்களும் தொழுங்கள்"

1. முழுமையான முறையில் உளூ செய்ய வேண்டும். எந்த முறைப்படி உளூ செய்ய வேண்டுமென அல்லாஹ் கட்டளையிட்டுள்ளானோ அந்த முறைப்படி செய்ய வேண்டும்.

يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا إِذَا قُمْتُمْ إِلَى الصَّلَاةِ فَاغْسِلُوا وُجُوهَكُمْ وَأَيْدِيَكُمْ إِلَى الْمَرَافِقِ وَامْسَحُوا بِرُءُوسِكُمْ وَأَرْجُلَكُمْ إِلَى الْكَعْبَيْنِ

அல்லாஹ் கூறுகிறான்: "இறைநம்பிக்கை கொண்டவர்களே! நீங்கள் தொழுகையை நாடிச்செல்லும்போது உங்கள் முகங்களையும் முழங்கைகள் வரை உங்கள் கரங்களையும் கழுவுங்கள். இன்னும் உங்கள் தலைகளை (நீரால்) தடவுங்கள். மேலும் உங்கள் கால்களை இரு கணுக்கால்கள் வரை கழுவுங்கள்" (குர்ஆன் 5 : 6) - மேலும் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

لاَتُقْبَلُ صَلاَةٌ بِغَيْرِ طَهُوْرٍ وَلاَ صَدَقَةٌ مِنْ غُلُوْلٍ (رواه مسلم في صحيحه)

"தூய்மை இன்றி தொழுகை ஒப்புக்கொள்ளப்படமாட்டாது. வஞ்சனை செய்து வழங்கப்படும் தர்மம் ஒப்புக்கொள்ளப் படமாட்டாது " (ஸஹீஹ் முஸ்லிம்)

2 - தொழுபவர் கிப்லாவை அதாவது மக்கா நகரில் உள்ள கஅ்பா ஆலயத்தின் திசையை முன்னோக்கி நிற்க வேண்டும். அவர் எங்கு இருந்தாலும் சரியே! முழுஉடலுடனும் முன்னோக்க வேண்டும். தான் தொழப்போகும் கடமையான அல்லது நஃபிலான தொழுகையை உள்ளத்தில் நினைத்தவாறு கிப்லாவை முன்னோக்கி நிற்க வேண்டும். அவ்வாறு நினைப்பதை நாவால் சொல்ல வேண்டியதில்லை.

ஏனெனில் அவ்வாறு மனதில் எண்ணுவதை - நிய்யத்தை நாவால் சொல்வது மார்க்கத்தின் நடைமுறையில் இல்லை. நபி(ஸல்) அவர்களும் நிய்யத்தை நாவால் சொன்னதில்லை. அவர்களின் தோழர்களும் அப்படிச் செய்ததில்லை.

தொழுபவர் தனக்கு முன்னால் ஏதேனும் ஒரு பொருளைத் திரையாக வைத்துக்கொண்டு தொழ வேண்டும். இது ஸுன்னத் - நபிவழியாகும். இமாமாக முன்னின்று தொழவைத்தாலும் சரி, தனியாகத் தொழுதாலும் சரியே! ஏனெனில்

அவ்வாறு செய்ய வேண்டுமென நபியவர்கள் கட்டளையிட்டுள்ளார்கள்.

3. اَللهُ أَكْبَرْ அல்லாஹு அக்பர் என்று தக்பீர் சொல்லி தொழுகையைத் தொடங்க வேண்டும். ஸஜ்தா செய்யும் இடத்தைப் பார்த்துக்கொண்டிருக்க வேண்டும்.

4. அப்படி அல்லாஹு அக்பர் என்று தக்பீர் சொல்லும் போது இரண்டு கைகளையும் புஜத்திற்கு நேராக அல்லது காதுக்கு நேராக உயர்த்த வேண்டும்.

5. இரண்டு கைகளையும் நெஞ்சுக்கு மேலே கட்டிக்கொள்ள வேண்டும். வலது கையை இடது கை மணிக்கட்டின் மீது வைத்து நெஞ்சின் மீது கட்டிக்கொள்ள வேண்டும். ஏனெனில் வாயிலுப்னு ஹுஜ்ர் (ரலி), கபீஸத் பின் ஹலபுத் தாயி (ரலி) இவ்விரு நபித்தோழர்களும் அறிவித்திருக்கும் நபிமொழியில் அவ்வாறு வந்துள்ளது.

6. பிறகு இந்த துஆவை ஓதுவது ஸுன்னத் - நபிவழி ஆகும்.

| | |
|---|---|
| அல்லாஹும்ம பாஇத் | اَللّٰهُمَّ بَاعِدْ |
| பைனீ வ பைன க(த்) தாயாய | بَيْنِي وَبَيْنَ خَطَايَايَ |
| கமா பாஅத்த | كَمَا بَاعَدْتَ |
| பைனல் மஷ்ரிகி வல் மஃக்ரிபி | بَيْنَ الْمَشْرِقِ وَالْمَغْرِبِ |

| | |
|---|---|
| அல்லாஹும்ம நக்கினீ மின் க(த்)தாயாய | اَللَّهُمَّ نَقِّنِي مِنْ خَطَايَايَ |
| கமா யுனக்கஸ் ஸவ்புல் அப்யளு | كَمَا يُنَقَّى الثَّوْبُ الاَبْيَضُ |
| மினித் தனஸி | مِنَ الدَّنَسِ |
| அல்லாஹும் மஃக் ஸில்னீ | اَللَّهُمَّ اغْسِلْنِى |
| மின் க(த்)தாயாய | مِنْ خَطَايَايَ |
| பில் மாயி வஸ் ஸல்ஜி வல் பரத் | بِالْمَاءِ وَالثَّلْجِ وَالْبَرَدِ |

(பொருள்: இறைவனே! எனக்கும் என்னுடைய தவறுகளுக்கும் மத்தியில் இடைவெளி ஏற்படுத்துவாயாக! கிழக்கிற்கும் மேற்கிற்கும் மத்தியில் நீ இடைவெளி எற்படுத்தியதுபோன்று! இறைவனே, என் தவறுகளை விட்டும் என்னைத் தூய்மைப் படுத்துவாயாக., வெள்ளை ஆடையை அழுக்கில் இருந்து தூய்மைப்படுத்துவது போன்று! இறைவனே, தண்ணீர், பனி மற்றும் பனிக்கட்டி கொண்டு என்னைக் கழுவி என் குற்றங் களைப் போக்குவாயாக!)

நீங்கள் விரும்பினால் இந்த துஆவை விடுத்து பின்வரும் துஆவை ஓதலாம்:

| | |
|---|---|
| ஸு ப்ஹான(க்) கல் லாஹும் ம வபி ஹம் தி(க்)க | سُبْحَانَكَ اللَّهُمَّ وَبِحَمْدِكَ |

| | |
|---|---|
| வதபார(க்)கஸ்மு(க்)க | وَتَبَارَكَ اسْمُكَ |
| வதஆலா ஜத்து(க்)க | وَتَعَالٰى جَدُّكَ |
| வ லா இலாஹ ஃகை ருக் | وَلاَ اِلٰهَ غَيْرُكَ |

(பொருள்: யா அல்லாஹ், உன்னைப் புகழ்வதுடன் துதிக்க வும் செய்கிறேன். உனது திருப்பெயர் அருட்பேறுடையது. உனது ஆற்றல் மிகவும் உயர்ந்தது. உன்னைத் தவிர வணக்கத்திற்குரிய இறைவன் வேறு யாரும் இல்லை) - பிறகு

| | |
|---|---|
| அஊதுபில்லாஹி மினஷ் ஷைத்தானிர் ரஜீம் | اَعُوْذُ بِاللهِ مِنَ الشَّيْطَانِ الرَّجِيْمِ |

(பொருள்: அல்லாஹ்வைக்கொண்டு நான் பாதுகாவல் தேடு கிறேன்., விரட்டப்பட்ட ஷைத்தானிடம் இருந்து!) -என்றும்

| | |
|---|---|
| பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம் | بِسْمِ اللهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ |

(பொருள்: அளவிலாக் கருணையும் நிகரிலாக் கிருபையும் உடைய அல்லாஹ்வின் திருப்பெயரால்...) என்றும் ஓத வேண்டும்.

பிறகு ஃபாத்திஹா அத்தியாயத்தை ஓத வேண்டும். ஏனெ னில் நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்: "குர்ஆனின் தொடக்கமாகிய ஃபாத்திஹா அத்தியாயத்தை யார் ஓதவில் லையோ அவருக்குத் தொழுகை இல்லை "

## ஃபாத்திஹா அத்தியாயம்

| | |
|---|---|
| அல் ஹம்து லில்லாஹி | اَلْحَمْدُ لِلّٰهِ |
| றப்பில் ஆலமீன் | رَبِّ الْعَالَمِيْنَ Ó |
| அர் ரஹ்மானிர் ரஹீம் | اَلرَّحْمٰنِ الرَّحِيْمِ Ó |
| மாலி(க்)கி யவ்மித்தீன் | مَالِكِ يَوْمِ الدِّيْنِ Ó |
| இய்யா(க்)க நஃபுது வ இய்யா(க்)க நஸ்தாஈன் | اِيَّاكَ نَعْبُدُ وَاِيَّاكَ نَسْتَعِيْنُ Ó |
| இஹ்தினஸ் ஸிறாத்(த்) தல் முஸ்தQகீம் | اِهْدِنَا الصِّرَاطَ الْمُسْتَقِيْمَ Ó |
| ஸிறா(த்)த்தல்லதீன அன்அம்(த்)த அலைஹிம் | صِرَاطَ الَّذِيْنَ اَنْعَمْتَ عَلَيْهِمْ Ó |
| ஃகைரில் மஃக்ளூபி அலைஹிம் | غَيْرِ الْمَغْضُوْبِ عَلَيْهِمْ |
| வலள் ளால்லீன் | وَلَا الضَّالِّيْنَ Ó |

(பொருள்: எல்லாப் புகழும் அனைத்துலகையும் படைத்துப் பரிபாலிக்கக்கூடிய அல்லாஹ்வுக்கே உரியது!அவன் மாபெரும் கருணையாளன். தனிப்பெரும் கிருபையாளன். கூலி கொடுக்கும் நாளின் அதிபதி. உன்னையே நாங்கள் வணங்குகிறோம். மேலும் உன்னிடமே நாங்கள் உதவிதேடு கிறோம். எங்

களை நீ நேரான வழியில் செலுத்துவாயாக! (அது) எவர் களுக்கு நீ அருள் புரிந்தாயோ அவர்களின் வழி. உனது கோபத்திற்கு ஆளாகாத மற்றும் நெறிகெட்டுப் போகாத வர்களின் வழி)

ஃபாத்திஹா அத்தியாயத்தை ஓதிய பிறகு ஆமீன் என்று சப்தமாகச் சொல்ல வேண்டும். சப்தமிட்டு ஓதும் தொழுகை களில் அவ்வாறு சப்தமாகச் சொல்ல வேண்டும். பிறகு குர்ஆனில் இருந்து மனப்பாடமாக உள்ள வசனங்களை ஓத வேண்டும்.

7. பிறகு இரண்டு கைகளையும் இரு புஜங்களுக்கு நேராக அல்லது இரண்டு காதுகளுக்கு நேராக உயர்த்தியவாறு, அல்லாஹு அக்பர் اَللهُ اَكْبَرُ என்று கூறிக் கொண்டு ருகூஉ செய்ய வேண்டும். ருகூஉ செய்வதென்றால், விரல்களை விரித்து வைத்தவாறு கைகளால் முட்டுக்கால்களைப் பிடித்துக்கொண்டு தலையை முதுகு மட்டத்திற்குத் தாழ்த்தியவாறு குனிந்து நிற்க வேண்டும். அவ்வாறு சிறிது நேரம் அமைதி யாக இருக்க வேண்டும். அப்போது பின்வரும் திக்ரை ஓத வேண்டும்.

| ஸுப்ஹான றப்பியல் அழீம் | سُبْحَانَ رَبِّيَ الْعَظِيْمِ |
|---|---|

(பொருள்: மகத்துவமிக்க என் இறைவனைத் தூயவன் என்று துதிக்கிறேன்)

இதனை மூன்று தடவை அல்லது அதற்கு அதிகமாக ஓதுவது சிறந்ததாகும். அத்துடன் இதனையும் ஓதுவது விரும்பத்தக்கதாகும்.

| | |
|---|---|
| ஸுப்ஹான கல்லா ஹும்ம றப்பனா வபிஹம்திக்க | سُبْحَانَكَ اللّٰهُمَّ رَبَّنَا وَبِحَمْدِكَ |
| அல்லாஹும்மஃக்பிர்லீ | اَللّٰهُمَّ اغْفِرْلِي |

(பொருள்: யாஅல்லாஹ், என் அதிபதியே, உன்னைப் புகழ்வதுடன் உன்னைத் தூயவன் என்று துதிக்கிறேன். யா அல்லாஹ், என்னை மன்னிப்பாயாக!)

8. ருகூஉ-வில் இருந்து நிமிர்ந்து, நேராக நிற்க வேண்டும். அப்போது இரண்டு கைகளையும் புஜத்திற்கு நேராக அல்லது காதுக்கு நேராக ஒரு தடவை உயர்த்திக் கொள்ள வேண்டும். ருகூஉ-வில் இருந்து எழும்போது -

| | |
|---|---|
| ஸமிஅல்லாஹு லிமன் ஹமிதா(ஹ்) | سَمِعَ اللهُ لِمَنْ حَمِدَهُ |

(பொருள்: தன்னைப் புகழ்வதை அல்லாஹ் கேட்டுக் கொண்டான்)

என்று சொல்ல வேண்டும். இமாமாக இருந்தாலும் சரி, தனியாகத் தொழுதாலும் சரி இவ்வாறு சொல்ல வேண்டும். நேராக நிமிர்ந்து நின்றதும் இந்த திக்ரை ஓத வேண்டும்:

| | |
|---|---|
| றப்பனா வல(க்)கல் ஹம்து | رَبَّنَا وَ لَكَ الْحَمْدُ |

| | |
|---|---|
| ஹம்தன் கஸீறன் தய்யிப(ன்)ம் | حَمْدًا كَثِيْرًا طَيِّبًا |
| முபாறக்கன் ஃபீஹி | مُّبَارَكًا فِيْهِ |
| மில் அஸ் ஸமாவாத்தி | مِلْأَ السَّمَاوَاتِ |
| வ மில்அல் அர்ளி வ மில்அமாபைன ஹு மா | وَمِلْأَ الْأَرْضِ وَمِلْأَ مَا بَيْنَهُمَا |
| வ மில்அ மாஷிஅ்த்த | وَمِلْأَ مَا شِئْتَ |
| மின் ஷையின் பஅ்த் | مِنْ شَيْءٍ بَعْدُ |

(பொருள்: எங்கள் இறைவனே, மேலும் புகழ் அனைத்துப் உனக்கே! அருட்பேறும் அழகும் மிக்க அதிகமான புகழ்.. வானங்கள் நிரம்ப, பூமி நிரம்ப, அவ்விரண்டில் உள்ள பொருள்கள் நிரம்ப. இதற்குப் பிறகு நீ விரும்பும் அத்தனை பொருள்கள் நிரம்ப அனைத்துப் புகழும் (உனக்கே சொரந்தம்) - இத்துடன்,

| | |
|---|---|
| அஹ்லுஸ் ஸனாஇ வல் மஜ்தி | أَهْلُ الثَّنَاءِ وَ الْمَجْدِ |
| அஹக்கு மா காலல் அப்து | أَحَقُّ مَا قَالَ الْعَبْدُ |
| வ குல்லனா ல(க்)க அப்துன் | وَكُلُّنَا لَكَ عَبْدٌ |

| அல்லாஹும்ம லா மானிஅ லிமா அஃ (த்) தைத்த | اَللّٰهُمَّ لاَمَانِعَ لِمَا اَعْطَيْتَ |
|---|---|
| வலா முஃ(த்)திய லிமா மனஃத்த | وَلاَ مُعْطِيَ لِمَا مَنَعْتَ |
| வலா ய்ன்ஃபஉ தல் ஜத்தி | وَلاَ يَنْفَعُ ذَا الْجَدِّ |
| மின்கல் ஜத் | مِنْكَ الْجَدُّ |

(பொருள்: புகழுக்கும் கீர்த்திக்கும் உரியவன் நீ. இது அடியான் கூறுவதற்கு மிகவும் தகுதி வாய்ந்ததாகும். மேலும் நாங்கள் அனைவரும் உனக்கு அடிமைகளே! யா அல்லாஹ், நீ கொடுத்ததைத் தடுப்பவர் யாரும் இல்லை. நீ தடுத்த தைக் கொடுப்பவர் யாருமில்லை. செல்வம் உடையவர் எவரையும் அவரது செல்வம் உனது தண்டனையில் இருந்து காத்திட முடியாது) எனும் திக்ரையும் ஒருவர் அதிகப்படியாக ஓதினால் அது நல்லதே. ஏனெனில் நம்பகமான சில நபிமொழிகளில் நபி (ஸல்) அவர்கள் இந்த திக்ரையும் ஓதிய தாக வந்துள்ளது.

ஆனால் மஃமூமாக அதாவது, இமாமைப் பின்பற்றித் தொழுபவராக இருந்தால் நிலைக்கு நிமிர்ந்ததும் அதிகப்படி யான இந்த திக்ரை அவர் ஓத வேண்டியதில்லை. முன்னர் கூறிய றப்பனாவலக்கல் ஹம்த் எனும் திக்ரை ஓத வேண் டும்.

நிலையில் நிற்கும்போது இமாமும் சரி, தனியாகத் தொழுபவரும் சரி - ருகூஉ செய்வதற்கு முன்னர் செய்தது போன்று நெஞ்சின் மீது கைகளைக் கட்டுவது விரும்பத் தக்கது ஆகும். வாயில் இப்னு ஹுஜ்ர், ஸஹ்ல் பின் ஸஅத் (ரலி) ஆகிய இருவரும் அறிவித்துள்ள நபிமொழிகளில் நபி (ஸல்) அவர்கள் அவ்வாறு செய்ததாக வந்துள்ளது.

9. **அல்லாஹு அக்பர்** என்று சொல்லியவாறு ஸுஜூது செய்ய வேண்டும். முடிந்தால் முட்டுக்கால்களைத் தரையில் வைத்து பிறகு கைகளை வைத்து ஸுஜூதுக்கு செல்ல வேண்டும்., இது இலகுவாக இருந்தால்! இப்படிச் செய்வது சிரமமாக இருந்தால் கைகளை முதலில் தரையில் வைத்து பிறகு முட்டுக்கால்களை வைக்கலாம். கால்விரல்களும் கை விரல்களும் கிப்லாவை முன்னோக்கியவாறு இருக்க வேண்டும். கைவிரல்களை விரித்து வைக்காமல் சேர்த்து வைத்திருக்க வேண்டும். பின்வரும் ஏழு உறுப்புகளைக் கொண்டு ஸுஜூது செய்ய வேண்டும். மூக்குடன் நெற்றி, உள்ளங் கைகள், முட்டுக்கால்கள், இரு கால்விரல்களின் உட்பகுதி கள். அப்போது,

| ஸுப்ஹான றப்பியல் அஃலா | سُبْحَانَ رَبِّيَ الأَعْلَى |
|---|---|

(பொருள்: மிக உயர்ந்தவனாகிய என் இறைவனைத் துதிக்கிறேன்)

என்று மூன்று தடவை அல்லது அதற்கு அதிகமாகக் கூற வேண்டும். அத்துடன் பின்வரும் திக்ரையும் சொல்வது விரும் பத்தக்கது:

| | |
|---|---|
| ஸு ப்ஹான(க்)கல்லா ஹு ம்ம | سُبْحَانَكَ اللّٰهُمَّ |
| றப்பனா வபி ஹம் திக்க | رَبَّنَا وَبِحَمْدِكَ |
| அல்லாஹு ம்ம:க் :பிர்லீ | اَللّٰهُمَّ اغْفِرْلِى |

(பொருள்: இறைவா, என் அதிபதியே, உன்னைப் புகழ் வதுடன் தூயவன் என்று துதிக்கிறேன். என்னை மன்னித் தருள்வாயாக)

ஸஜ்தாவில் அதிகமாகப் பிரார்த்தனை செய்வது நல்லது. ஏனெனில் நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்: "ருகூஉ செய்யும்போது உங்கள் இறைவனின் பெருமைகளை எடுத் துரையுங்கள். ஸு ஜூ து செய்யும்போது துஆ -பிரார்த்தனை செய்யுங்கள். ஸு ஜூ தின் பிரார்த்தனைகள் ஏற்றுக்கொள்ளத் தக்கவையாக உள்ளன " (நூல்: ஸஹீஹ் முஸ்லிம்)

மேலும் கூறினார்கள்: "அடியான் தன் இறைவனுடன் மிகவும் நெருக்கமாக இருக்கும்நிலை, அவன் ஸு ஜூ தில் இருக்கும் நிலைதான். எனவே அதில் அதிகம்அதிகம் பிரார்த் தனை செய்யுங்கள்" (நூல்: ஸஹீஹ் முஸ்லிம்)

இறைவனிடம் தனக்காகவும் பிற முஸ்லிம்களுக் காக வும் ஈருலக நன்மைகளைக் கேட்டுப் பிரார்த்தனை செய்ய வேண்டும். அது கடமையான தொழுகையாக இருந்தாலும் சரி, ந:பிலான - ஸு ன்னத்தான தொழுகையாக இருந் தாலும் சரியே! மேலும் இரண்டு குடங்கைகளையும்

விலாவுடன் சேர்க்காமல் அகற்றி வைத்திருக்க வேண்டும். இதேபோன்று வயிற்றைத் தொடைகளை விட்டும் தொடைகளைக் கரண்டைக் கால்ளை விட்டும் உயர்த்தி வைத்திருக்க வேண்டும். மேலும் முழங்கைகளைப் பூமியை விட்டும் உயர்த்தி வைத்திருக்க வேண்டும். ஏனெனில் நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்: "ஸு ஜூ தை சீராகச்செய்யுங்கள். உங்கள் முழங்கைகளை, நாய் விரித்து வைத்திருப்பது போன்று விரித்து வைக்காதீர்கள்"

10. அல்லாஹு அக்பர் என்று சொல்லியவாறு ஸு ஜூ தை விட்டும் தலையை உயர்த்த வேண்டும். இடது பாதத்தை விரித்து வைத்து அதன் மீது அமர வேண்டும். வலது பாதத்தை நேராக வைக்க வேண்டும். இரண்டு கைகளையும் முட்டுக்கால் மற்றும் தொடைகளின் மீது வைக்க வேண்டும். அப்போது பின்வரும் துஆவை ஓத வேண்டும்.

| | |
|---|---|
| றப்பி∴க்∴பிர்லீ (3தடவை) | رَبِّ اغْفِرْلِي (٣ مرة) |
| அல்லாஹு ம்ம றப்பி∴க்∴பிர்லீ | اَللَّهُمَّ رَبِّ اغْفِرْلِي |
| வர்ஹம்னீ வர்ஸு க்னீ | وَارْحَمْنِي وَارْزُقْنِي |
| வ ஆ∴பினீ வஹ்தினீ | وَعَافِنِي وَاهْدِنِي |
| வஜ்புர்னீ | وَاجْبُرْنِي |

(பொருள்: என் இறைவனே, என்னை மன்னித்தருள். என் இறைவனே, என்னை மன்னித்தருள். என் இறைவனே, என்னை மன்னித்தருள். யா அல்லாஹ், என்னை மன்னித் தருள். எனக்கு கிருபை செய். எனக்கு நற்பேறு வழங்கு. எனக்கு சுகம் அளித்திடு. எனக்கு நேர்வழி காட்டிடு. எனக்கு ஆறுதல் அளித்திடு)

இந்த அமர்விலும் சற்று அமைதியாக இருக்க வேண்டும்., ருகூஉ செய்த பிறகு நிலைக்கு வந்து சற்று அமைதியாக நிற்பது போன்று! ஏனெனில் நபி (ஸல்) அவர்கள் ருகூஉ செய்த பிறகு நிலையிலும் இரண்டு ஸஜ்தாக்களுக்கு மத்தி யிலும் சற்று அதிகம் அமைதியாய் இருந்துள்ளார்கள்.

11. அல்லாஹு அக்பர் என்று சொல்லியவாறு இரண்டாவது ஸஜ்தா செய்ய வேண்டும். முதல் ஸஜ்தாவில் செய்தது போன்றே இதிலும் செய்ய வேண்டும்.

12. பிறகு அல்லாஹு அக்பர் என்று சொல்லியவாறு தலையை உயர்த்தி அமர்வுக்கு வர வேண்டும். இரண்டு ஸஜ்தாக் களுக்கு மத்தியில் அமர்ந்திருந்தது போன்று இங்கும் சிறிய அமர்வாக அமர்ந்திருக்க வேண்டும். இதற்கு جلْسَةُ الاسْتِرَاحَة (ஜில்ஸதுத்துல் இஸ்திறாஹா) ஓய்வின் அமர்வு எனப்படும். இது மார்க்க அறிஞர்களின் மிகச்சரியான கருத்துப்படி مُسْتَحَبٌّ விரும்பத்தக்க ஒன்றாகும். இந்த அமர்வை மேற்கொள்ள வில்லை என்றால் குற்றம் எதுவும் இல்லை. இதில் திக்ர், துஆ எதுவும் இல்லை.

பிறகு இரண்டாவது ரக்அத்திற்காக எழுந்திருக்க வேண்டும். இரண்டு முட்டுக்கால்களையும் ஊன்றிக்கொண்டு எழுந்திட முடிந்தால் அவ்வாறு செய்யவும். அது சிரமமாக இருந்தால் கைகளைத் தரையில் ஊன்றிக்கொண்டு எழலாம். பிறகு அல்ஃபாத்திஹா அத்தியாயத்தை ஓத வேண்டும். அத்துடன் குர்ஆனிலிருந்து எளிதாக ஓதவரும் வசனங்களை ஓத வேண்டும். பிறகு முதல் ரக்அத்தில் செய்ததுபோன்று செய்ய வேண்டும்.

இமாமை பின்பற்றித் தொழுபவர் இமாமை முந்துவது கூடாது. ஏனெனில் அது குறித்து நபி (ஸல்) அவர்கள் உம்மத்தினரை எச்சரிக்கை செய்துள்ளார்கள். இதேபோன்று இமாம் செய்வதோடு சேர்ந்து செயல்படுவதும் வெறுக்கத் தக்கதாகும். நபிவழி என்னவெனில், பின்பற்றித் தொழுபவரின் செயல்கள் இமாமுக்குப் பிறகு அமைவதாகும்., இமாம் உடைய குரலுக்குப் பிறகு, தாமதமின்றி!

ஏனெனில் நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்: "இமாம் நியமிக்கப்பட்டிருப்பது அவரைப் பின்பற்றத்தான்! எனவே அவரை விட்டும் தாமதிக்காதீர்கள். அவர் அல்லாஹு அக்பர் என்று சொன்னால் நீங்கள் அல்லாஹு அக்பர் என்று சொல்லுங்கள். அவர் ஸமிஅல்லாஹு லிமன் ஹமிதா என்று சொன்னால் நீங்கள் றப்பனா வலகல் ஹம்த் என்று சொல்லுங்கள். அவர் ஸஜ்தா செய்தால் நீங்கள் ஸஜதா செய்யுங்கள்" (நூல்: புகாரி, முஸ்லிம்)

13. ஃபஜ்ர், ஜும்ஆ, ஈத் தொழுகைகளைப் போன்று இரண்டு ரக்அத் தொழுகையாக இருந்தால் இரண்டாவது ரக்அத்தில்

இரண்டாவது ஸஜ்தா செய்து முடித்துக்கொண்டு அமர வேண்டும். வலது பாதத்தை நட்டு வைத்து இடது பாதத்தை விரித்து வைத்து அமர வேண்டும். வலது கையை வலது தொடையின் மீது வைக்க வேண்டும். ஆட்காட்டி விரலைத் தவிர எல்லா விரல்களையும் மடக்கி வைக்க வேண்டும். அல்லாஹ்வின் பெயரைக் கூறும்போதும், பிரார்த் தனை செய்யும்போதும் ஆட்காட்டி விரலைக்கொண்டு **தவ்ஹீத்** எனும் ஓரிறைக் கொள்கையின் பக்கம் சைக்கினை செய்ய வேண்டும்.

சுண்டு விரலையும் மோதிர விரலையும் மடக்கி வைத்து நடுவிரலுடன் பெருவிரலை இணைத்து வளையமாக வைத் துக்கொண்டு ஆட்காட்டி விரலைக்கொண்டு சைக்கினை செய்தால் அதுவும் நல்லதாகும். இரண்டு விதமாகவும் நபி (ஸல்) அவர்கள் செய்திருப்பதாக நபிமொழிகளில் வந்துள் ளது. ஆனாலும் இவ்வாறு ஒரு தடவையும் அவ்வாறு ஒரு தடவையும் செய்வது சிறப்புடையதாகும்.

இடது கையை இடது முட்டுக்காலின் மீதும் தொடையின் மீதும் வைக்க வேண்டும்.

இந்த அமர்வில் அத்தஹிய்யாத் எனும் திக்ரை ஓத வேண்டும். அது வருமாறு:

| | |
|---|---|
| அத்தஹிய்யாத்து லில் லாஹி வஸ்ஸலவாத்து | اَلتَّحِيَّاتُ لِلّٰهِ وَالصَّلَوَاتُ |
| வத்தய்யிபாத்து | وَالطَّيِّبَاتُ |

| | |
|---|---|
| அஸ்ஸலாமு அலைக்க அய்யுஹன் நபிய்யு | اَلسَّلَامُ عَلَيْكَ اَيُّهَا النَّبِيُّ |
| வ ரஹ்மத்துல்லாஹி வ பரகாத்துஹு | وَ رَحْمَةُ اللّٰهِ وَ بَرَكَاتُهُ |
| அஸ்ஸலாமு அலைனா | اَلسَّلَامُ عَلَيْنَا |
| வ அலா இபாதில்லா ஹிஸ் ஸாலிஹீன் | وَ عَلٰى عِبَادِ اللّٰهِ الصَّالِحِيْنَ |
| அஷ்ஹது அ(ன்)ல்லா இலாஹஇல்லல்லாஹு | اَشْهَدُ اَنْ لَّآ اِلٰهَ اِلَّا اللّٰهُ |
| வ அஷ்ஹது அன்ன முஹம்மதன் | وَاَشْهَدُ اَنَّ مُحَمَّدًا |
| அப்துஹு வ ரஸூ லுஹ் | عَبْدُهٗ وَرَسُوْلُهٗ |

(பொருள்: காணிக்கைகள், வணக்கங்கள், மற்றும் நற்பணிகள் அனைத்தும் அல்லாஹ்வுக்கே உரியவை ஆகும். நபியே, அமைதியும் அல்லாஹ்வின் கருணையும் அருட்பேறுகளும் உங்கள் மீது உண்டாகட்டும். எங்கள் மீதும் அல்லாஹ்வின் நல்லடியார்கள் மீதும் அமைதி உண்டாகட்டும். வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை என்றும் முஹம்மத் நபி அவர்கள் அல்லாஹ்வின் அடியார், தூதர் என்றும் நான் சாட்சியம் சொல்கிறேன்)

இதன் பிறகு பின்வரும் ஸலவாத்தையும் ஓத வேண்டும்:

| | |
|---|---|
| அல்லாஹு ம்ம ஸல்லி அலா முஹம்மதின் | اَللّٰهُمَّ صَلِّ عَلٰى مُحَمَّدٍ |

| வ அலா ஆலி முஹம் மதின் | وَ عَلٰى آلِ مُحَمَّدٍ |
|---|---|
| கமா ஸல்லைத்த அலா இப்றாஹீம | كَمَا صَلَّيْتَ عَلٰى اِبْرَاهِيْمَ |
| வ ஆலி இப்றாஹீம | وَ آلِ اِبْرَاهِيْمَ |
| இன்னக்க ஹமீது(ன்)ம் மஜீத் | اِنَّكَ حَمِيْدٌ مَجِيْدٌ |
| வபாரிக் அலா முஹம் மதின் | وَبَارِكْ عَلٰى مُحَمَّدٍ |
| வஅலா ஆலி முஹம்ம தின் | وَعَلٰى آلِ مُحَمَّدٍ |
| கமா பாரக்கத்த அலா இப்றாஹீம | كَمَا بَارَكْتَ عَلٰى اِبْرَاهِيْمَ |
| வ ஆலி இப்றாஹீம | وَ آلِ اِبْرَاهِيْمَ |
| இன்னக்க ஹமீது(ன்)ம் மஜீத் | اِنَّكَ حَمِيْدٌ مَّجِيْدٌ |

(பொருள்: யா அல்லாஹ், முஹம்மத் நபி மீதும் அவர்களின் வழிவந்தவர்கள் மீதும் கருணை பொழிவாயாக! இப்றாஹீம் நபி மீதும் அவர்களின் வழிவந்தவர்கள் மீதும் நீ கருணை பொழிந்ததுபோன்று! நிச்சயமாக நீ புகழுக்கும் மகத்துவத் திற்கும் உரியவன். யா அல்லாஹ், முஹம்மத் நபி மீதும் அவர்களின் வழிவந்தவர்கள் மீதும் அருட்போறுகள் பொழி

வாயாக, இப்றாஹீம் நபி மீதும் அவர்களின் வழிவந்தவர்கள் மீதும் அருட்பாக்கியங்கள் பொழிந்தது போன்று! நிச்சயமாக நீ புகழுக்கும் மகத்துவத்திற்கும் உரியவன்)

அத்துடன் இந்த நான்கு தீமைகளில் இருந்து அல்லாஹ் விடம் பாதுகாவல் தேடவேண்டும். அதற்கான துஆ வருமாறு:

| | |
|---|---|
| அல்லாஹு ம் இன்னீ அஊது பிக்க | اَللّٰهُمَّ اِنِّى اَعُوْذُ بِكَ |
| மின் அதாபி ஜஹன் னம | مِنْ عَذَابِ جَهَنَّمَ |
| வ மின் அதாபில் கப்றி | وَمِنْ عَذَابِ الْقَبْرِ |
| வ மின் ஃபித்னத்தில் மஹ்யா வல் மமாத்தி | وَمِنْ فِتْنَةِ الْمَحْيَا وَالْمَمَاتِ |
| வ மின் ஃபித்னத்தில் மஸீஹித் தஜ்ஜால் | وَمِنْ فِتْنَةِ الْمَسِيْحِ الدَّجَّالِ |

(பொருள்: யா அல்லாஹ், நரகத்தின் வேதனையில் இருந் தும் மண்ணறையின் வேதனையில் இருந்தும் வாழ்க்கை மற் றும் மரணத்தின் குழப்பத்தில் இருந்தும் தஜ்ஜாலின் குழப் பத்தில் இருந்தும் நான் உன்னிடம் பாதுகாவல் தேடு கிறேன்)

பிறகு இம்மை - மறுமை நலன்களில் தான் நாடுகின்றவற் றைக் கேட்டுப் பிரார்த்தனை செய்யலாம். பெற்றோருக்காக அல்லது ஏனைய முஸ்லிம்களுக்காக பிரார்த்தனை செய்தால்

அதுவும் கூடும். கடமையான தொழுகையாயினும் நஃபிலான தொழுகையாயினும் சரியே!

பிறகு முகத்தை வலது புறமும் இடது புறமும் திருப்பி **அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மத்துல்லாஹ் - அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மத்துல்லாஹ்** என்று சொல்லி ஸலாம் கொடுக்க வேண்டும்.

**14.** மஃக்ரிப் தொழுகையைப்போன்று 3 ரக்அத் தொழுகை யாக இருந்தால் அல்லது ளுஹர், அஸர், இஷா தொழு கையைப்போன்று 4 ரக்அத் தொழுகையாக இருந்தால் மேலே கூறப்பட்ட அத்தஹிய்யாத்தையும் ஸலவாத்தையும் ஓத வேண் டும். பிறகு முழங்கால்களை ஊன்றிக்கொண்டு (மூன்றாவது ரக்அத்திற்காக) எழுந்து நிலைக்கு வர வேண்டும். இரண்டு கைகளை புஜம் வரை உயர்த்தி **அல்லாஹு** அக்பர் என்று கூறி நெஞ்சின் மீது கட்டிக்கொள்ள வேண்டும். முன்பு விளக்கியது போன்று! பிறகு ஃபாத்திஹா அத்தியாயத்தை மட்டும் ஓத வேண்டும்.

ளுஹர் தொழுகையில் 3 வது 4 வது ரக்அத்களில் ஃபாத்திஹாவுடன் சில நேரங்களில் வெறு சிறிய சூராவோ வசனங்களோ ஓதினால் அதில் குற்றம் ஏதும் இல்லை. ஏனெனில் நபி (ஸல்) அவர்கள் அவ்வாறு செய்ததாக அபூ ஸயீத் (ரலி) அவர்கள் அறிவித்துள்ளார்கள்.

மஃக்ரிப் தொழுகையாயின் 3 வது ரக்அத்தில் அத்த ஹிய்யாத் ஓத வேண்டும். ளுஹர், அஸர், இஷா தொழுகை களில் 4 வது ரக்அத்தில் அத்தஹிய்யாத் ஓத வேண்டும்.

மேலும் நபி (ஸல்) அவர்களின் மீது ஸலவாத்தும் ஓத வேண்டும். மேலும் நரகத்தின் வேதனை, மண்ணறையின் வேதனை, தஜ்ஜாலின் குழப்பம் ஆகியவற்றிலிருந்து அல் லாஹ்விடம் பாதுகாவல் தேட வேண்டும்., ஏனைய துஆக் களையும் ஓத வேண்டும்., முன்பு இரண்டு ரக்அத் தொழுகையில் விவரிக்கப்பட்டது போன்று!

ஆயினும் இந்த அமர்வில் இடது கால்பாதத்தை வலது கால் பாதத்தின் கீழ் அமைத்து வைத்துக் கொண்டு இடது புட்டத்தைப் பூமியில் வைத்து அமர வேண்டும். வலது பாதத்தை நட்டு வைத்திருக்க வேண்டும். அபூ ஹுமைத் (ரலி) அவர்களின் அறிவிப்பில் இவ்வாறு வந்துள்ளது. பிறகு வலது புறமும் இடது புறமும் இலேசாக முகத்தைத் திருப்பி **அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மத்துல்லாஹ்** என்று கூறி ஸலாம் கொடுக்க வேண்டும். தொழுகை முடிந்ததும் -

அஸ்தஃபிருல்லாஹ் اَسْتَغْفِرُ الله (பொருள்: அல்லாஹ்விடம் பாவமன்னிப்பு கோருகிறேன்) என்று 3 தடவை சொல்ல வேண்டும். பிறகு

| | |
|---|---|
| **அல்லாஹும்ம அன்த்தஸ் ஸலாம்** | اَللّٰهُمَّ اَنْتَ السَّلاَمُ |
| **வமின்கஸ் ஸலாம்** | وَمِنْكَ السَّلاَمُ |
| **தபாரக்த்த யாதல் ஜலாலி** | تَبَارَكْتَ يَا ذَا الْجَلاَلِ |
| **வல் இக்றாம்** | وَالْاِكْرَامِ |

| | |
|---|---|
| லா இலாஹ இல்லல் லாஹு | لاَالٰهَ اِلاَّ اللهُ |
| வஹ்தஹு லாஷரீக்க லஹு | وَحْدَهُ لاَ شَرِيْكَ لَهُ |
| லஹு ல் முல்க்கு வல ஹு ல் ஹம்து | لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ |
| வஹு வ அலா குல்லி ஷைஇன் கதீர் | وَهُوَ عَلٰى كُلِّ شَيْءٍ قَدِيْرٌ |
| அல்லாஹு ம் லா மா னிஅலிமா அஃ(த்) தைத்த | اَللّٰهُمَّ لاَ مَانِعَ لِمَا أعْطَيْتَ |
| வலா முஃ(த்)திஅ லிமா மனஃத்த | وَلاَ مُعْطِيَ لِمَا مَنَعْتَ |
| வலா யன்ஃபஉ தல் ஜத்தி மின்க்கல் ஜத்து | وَلاَ يَنْفَعُ ذَا الْجَدِّ مِنْكَ الْجَدُّ |
| லா ஹவ்ல வலா குவ் வத்த இல்லா பில்லாஹ் | لاَ حَوْلَ وَلاَ قُوَّةَ اِلاَّ بِاللهِ |
| லா இலாஹ இல்லல் லாஹு | لاَ اِلٰهَ اِلاَّ اللهُ |
| வலா நஃபுது இல்லா இய்யாஹ் | وَلاَ نَعْبُدُ اِلاَّ اِيَّاهُ |
| லஹு ன் நிஃமத்து வல ஹு ல் ஃபழ்லு | لَهُ النِّعْمَةُ وَلَهُ الْفَضْلُ |
| வலஹு ஸ் ஸனாவுல் ஹஸன் | وَلَهُ الثَّنَاءُ الْحَسَنُ |

| | |
|---|---|
| லா இலாஹ இல்லல் லாஹு - | لَا اِلٰهَ اِلَّا اللّٰهُ |
| முக்லிஸீன லஹு த்தீன் | مُخْلِصِيْنَ لَهُ الدِّيْنَ |
| வலவ் கறிஹல் கா:பிரூன் | وَلَوْ كَرِهَ الْكَافِرُوْنَ |

(பொருள்: யா அல்லாஹ், நீ ஈடேற்றமளிப்பவன்., உன்னிடமிருந்தே ஈடேற்றம் உண்டாகிறது. கண்ணியமும் மாண்பும் உடையவனே, நீயே அருட்பேறுடையவன். வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை. அவன் தனித்தவன்.,அவனுக்கு யாதோர் இணையும் இல்லை. ஆட்சியதிகாரம் அவனுக்கே உரியது. புகழ் அனைத்தும் அவனுக்கே உரியது. மேலும் அவன் அனைத்தின் மீதும் ஆற்றல் நிறைந்தவன். யா அல்லாஹ், நீ கொடுத்ததைத் தடுப்பவர் யாரும் இல்லை. நீ தடுத்ததைக் கொடுப்பவர் யாரும் இல்லை. செல்வமுடையவர் எவரையும் அவரது செல்வம் உனது தண்டனையில் இருந்து காப்பாற்ற முடியாது. தீமையிலிருந்து விலகுவதும் நன்மையின் மீது ஆற்றல் பெறுவதும் அல்லாஹ்வின் உதவி கொண்டே தவிர இல்லை. அவன் ஒருவனைத் தவிர வேறு யாரையும் நாங்கள் வணங்க மாட்டோம். அருட்கொடைகள் அனைத்தும் அவனுக்கே உரியன. சிறப்பு அனைத்தும் அவனுக்கே! அழகிய புகழும் அவனுக்கே! வணக்கத்திற்குரிய இறைவன் அவனைத் தவிர வேறு யாரும் இல்லை. கீழ்ப்படிதலை அவனுக்கே உரித்தாக்குகிறோம். நிராகரிப்பாளர்கள் வெறுத்தாலும் சரியே!)

பிறகு سُبْحَانَ الله ஸு ப்ஹானல்லாஹ் என்று 33 தடவையும் اَلْحَمْـدُ لله அல்ஹம்து லில்லாஹ் என்று 33 தடவையும் اَللهُ اَكْبَرُ அல்லாஹு அக்பர் என்று 33 தடவையும் சொல்ல வேண்டும். பிறகு 100 வது தடவையாக பின் வரும் திக்ரை ஓத வேண்டும். அது வருமாறு:

| | |
|---|---|
| லா இலாஹ இல்லல் லாஹு | لاَ اِلٰهَ اِلاَّ الله |
| வஹ்தஹு லா ஷரீக்க லஹு | وَحْدَهُ لاَ شَرِيْكَ لَهُ |
| லஹு ல் முல்கு வல ஹு ல் ஹம்து | لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ |
| வஹு வ அலா குல்லி ஷைஇன் கதீர் | وَهُوَ عَلٰى كُلِّ شَيْءٍ قَدِيْرٌ |

(பொருள்: வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை. அவன் தனித்தவன். அவனுக்கு யாதொரு இணையும் இல்லை. ஆட்சியதிகாரம் அவனுக்கு உரியதே! புகழ் அனைத்தும் அவனுக்கே! அவன் அனைத்தின் மீதும் ஆற்றல் கொண்டவன்)

தொடர்ந்து ஆயத்துல்குர்ஸியும் குல்ஹு வல் லாஹு அஹத், குல் அஊது பிறப்பில் ஃபலக், குர் அஊது பிறப்பின் நாஸ் ஆகிய சூறாக்களையும் ஓத வேண்டும். ஒவ்வொரு தொழுகைக்குப் பிறகும் குறிப்பாக ஃபஜ்ர்,மஃக்ரிப், தொழுகை

களுக்குப் பிறகு இந்த 3 அத்தியாயங்களையும் 3 தடவை ஓதுவது விரும்பத்தக்கதாகும். ஏனெனில் நபி (ஸல்) அவர்கள் இவ்வாறு ஓதியதாக நம்பத்தக்க ஹதீஸில் வந்துள்ளது.

இதேபோன்று மேற்சொன்ன திக்ர்களுடன் ஃபஜ்ர், மஃக்ரிப் தொழுகைகளுக்குப் பிறகு பின்வரும் திக்ரை 10 தடவை ஓதுவதும் விரும்பத்தக்கதாகும். நபி (ஸல்) அவ்வாறு ஓதிய தாக ஹதீஸ்களில் வந்துள்ளது. அது வருமாறு:

| | |
|---|---|
| லா இலாஹ இல்லல் லாஹு | لاَ اِلٰهَ اِلاَّ اللّٰهُ |
| வஹ்தஹு லா ஷரீக்க லஹு | وَحْدَهُ لاَ شَرِيْكَ لَهُ |
| லஹு ல் முல்கு வல ஹு ல் ஹம்து | لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ |
| யுஹ்யீ வ யுமீத்து | يُحْيِي وَ يُمِيْتُ |
| வஹு வ அலா குல்லி ஷைஇன் கதீர் | وَهُوَ عَلٰى كُلِّ شَيْءٍ قَدِيْرٌ |

(பொருள்: வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறுயாரும் இல்லை. அவன் தனித்த வன். அவனுக்கு யாதொரு இணையும் இல்லை. ஆட்சி அதிகாரம் அவனுக்கே! புகழ் அனைத்தும் அவனுக்கு உரியதே! வாழ்வும் மரணமும் அளிப்பவன் அவனே! அவன் அனைத்தின் மீதும் ஆற்றல் நிறைந்தவன்)

இமாமாக இருந்தால் **அஸ்தஃக்ஃபிருல்லாஹ்** என்று 3 தடவை சொல்லி, **அல்லாஹும்ம அன்த்தஸ் ஸலாம் வ மின்(க்)கஸ் ஸலாம் தபாறக்த்த யாதல் ஜலாலி வல் இக்றாம்** என்று சொன்னவுடன் மக்களை முன்னோக்கித் திரும்பி உட்கார வேண்டும். பிறகு மேற்சொன்ன திக்ர்களை தொடர்ந்து ஓத வேண்டும். இவ்வாறே நபி (ஸல்) அவர்கள் செய்ததாக நிறைய ஹதீஸ்களில் விளக்கப்பட்டுள்ளது. அவற்றுள் ஒன்று தான் ஸஹீஹ் முஸ்லிம் நூலில் இடம் பெற்றுள்ள ஆயிஷா (ரலி) அவர்களின் ஹதீஸ். இந்த திக்ர் அனைத்தும் ஸுன்னத்தானே தவிர கடமையானவை அல்ல.

முஸ்லிமான ஆண், பெண் ஒவ்வொருவருக்கும் விரும்பத் தக்கது யாதெனில், ஊரில் தங்கியிருக்கும்போது (கடமையான தொழுகைகள் நீங்கலாக) பின்வரும் ஸுன்னத்தான 12 ரக்அத்களைப் பேணுதலுடன் கடைப்பிடித்து வருவதாகும். அவை வருமாறு:

**ளுஹர் தொழுகைக்கு முன் 4 ரக்அத்**
**ளுஹர் தொழுகைக்குப் பின் 2 ரக்அத்**
**மஃக்ரிப் தொழுகைக்குப் பின் 2 ரக்அத்**
**இஷா தொழுகைக்குப் பின் 2 ரக்அத்**
**ஸுப்ஹு தொழுகைக்கு முன் 2 ரக்அத்**

ஏனெனில் நபி (ஸல்) அவர்கள் இவ்வாறே தொடர்ந்து நிறைவேற்றி வந்துள்ளார்கள். இவற்றிற்கு رَوَاتِب றவாத்திப் என்று சொல்லப்படும்.

உம்மு ஹபீபா (ரலி) அவர்கள் அறிவித்துள்ளார்கள்: "நபி (ஸல்) அவர்கள் அருளினார்கள்: யார் தினமும் இந்த 12 ரக்அத் தொழுகைகளை நன்மை நாடி தொழுது வருகிறாரோ

அவர் சுவனபதியில் தனக்காக ஒரு வீட்டைக் கட்டியவர் ஆவார் " (நூல்: முஸ்லிம்)

இமாம் திர்மிரி (ரஹ்) அவர்கள் இந்த ஹதீஸிற்கான அறிவிப்பில் நாம் கூறிய கருத்துப்படியே விளக்கம் அளித்துள் ளார்கள்.

ஆனால் பயணத்தின்போது நபி(ஸல்) அவர்கள், ளுஹர், மஃக்ரிப், இஷா ஆகியவற்றின் ஸு ன்னத் தொழுகைகளைத் தொழுததில்லை. ஃபஜ்ரின் ஸு ன்னத், வித்ர் ஆகியவற்றைத் தொடர்ந்து நிறைவேற்றி வந்துள்ளார்கள். நபி (ஸல்) அவர் களிடம் நமக்கு அழகிய முன்மாதிரி இருக்கிறது. அல்லாஹ் குர்ஆனில் கூறியள்ளான்: "அல்லாஹ்வின் தூதரிடத்தில் உங்களுக்கு அழகிய முன்மாதிரி உள்ளது "

நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்: "நான் எவ்வாறு தொழுதிடக் கண்டீர்களோ அவ்வாறே நீங்கள் தொழுங்கள் "

# وجوب أداء الصلاة جماعة

لسماحة الشيخ عبد العزيز بن عبد الله بن باز رَحِمَهُ الله

## ஜமாஅத்துடன் தொழுவது கடமையே

மக்களில் பலர் தொழுகையை ஜமாஅத்துடன் நிறைவேற்று வதில் அலட்சியமாக இருப்பதுடன் அதற்கு மார்க்க அறிஞர் கள் சிலர் சலுகை அளித்திருப்பதாக 'ஆதாரம்'கூட காட்டு கிறார்கள் எனும் விஷயம் எமது கவனத்திற்கு வந்துள்ளது. இந்த முக்கியமான விஷயத்தைத் தெளிவுபடுத்துவதும் இந்தப் போக்கின் அபாயத்தை எடுத்துச் சொல்வதும் எமது கடமை ஆகும். அல்லாஹ் தனது திருவேதத்தில் எதனைக் கண்ணியப்படுத்தியுள்ளானோ, அல்லாஹ்வின் தூதரும் எதற் குப் பெரும் மதிப்பளித்துள்ளார்களோ அதில் ஒரு முஸ்லிம் அசட்டையாக இருப்பது அழகல்ல!

அல்லாஹ் திருக்குர்ஆனில் தொழுகையைப் பற்றி பல இடங்களில் குறிப்பிட்டிருக்கிறான். அதற்கு உயர் அந்தஸ்து அளித்திருக்கிறான். தொடர்ந்து தொழுகையைக் கடைப் பிடிக்கும்படியும் அதை ஜமாஅத்துடன் நிறைவேற்றும்படியும் கட்டளையிட்டுள்ளான். தொழுகை குறித்து அலட்சியமாக-சோம்பலாக இருப்பது நயவஞ்சகர்களின் செயலாகும் என்றும் அறிவித்துள்ளான். குர்ஆனில் அல்லாஹ் கூறுகிறான்:

حَافِظُوْا عَلَى الصَّلَوَاتِ وَالصَّلَاةِ الْوُسْطَى وَقُوْمُوْا لله قَانِتِيْنَ

"எல்லாத் தொழுகைகளையும் (குறிப்பாக சிறப்புகள் அனைத்தையும் ஒருங்கே பெற்றுள்ள) நடுத் தொழுகையையும்

பேணித் தொழுதுவாருங்கள். அல்லாஹ்வின் திருமுன் முற்றி லும் அடிபணிந்தவர்களாய் நில்லுங்கள்" (குர்ஆன் 2: 238)

ஓர் அடியான் தன் சகோதரர்களுடன் சேர்ந்து தொழு கையை நிறைவேற்றாமல் இருக்கும்போது - அதில் அவன் அலட்சியம் காட்டும்போது தொழுகையை அவன் தொடர்ந்து பேணிவருகிறான் என்று எப்படிச் சொல்ல முடியும்? தொழு கைக்கு அவன் கண்ணியம் அளிக்கிறான் என்று எப்படிக் கூற முடியும்? அல்லாஹ் குர்ஆனில் கூறியிருக்கிறான்:

وَاَقِيْمُوْا الصَّلَاةَ وَآتُوْا الزَّكَاةَ وَارْكَعُوْا مَعَ الرَّاكِعِيْنَ

"நீங்கள் தொழுகையை நிலைநாட்டுங்கள். ஜகாத்தும் கொடுத்து வாருங்கள். மேலும் என் முன்னிலையில் ருகூஉ-தலை சாய்ப்பவர்களுடன் சேர்ந்து நீங்களும் தலைசாயுங் கள்" (2 : 43)

இந்த வசனம்-தொழுகையை ஜமாஅத்துடன் நிறைவேற்று வது கடமை., ஏனைய தொழுகையாளிகளுடன் இணைந்து நின்று நிறைவேற்றுவது அவசியம் என்பதற்கு நேரடியான ஆதாரமாகும். (எப்படியேனும் தொழுகையை நிறைவேற்றுவது மட்டும்தான் நோக்கம் என்றிருக்குமானால் ருகூஉ செய் பவர்களுடன் சேர்ந்து நீங்களும் ருகூஉ செய்யுங்கள் என்று இந்த வசனத்தை முடித்திருப்பதற்கு தெளிவானதொரு கருத் துப் பொருத்தம் இருக்க முடியாது. ஏனெனில் வசனத்தின் ஆரம்பத்தில் தொழுகையை நிலைநாட்டுங்கள் என்று கட்டளையிடப்பட்டிருக்கிறது. மேலும் அல்லாஹ் கூறுகிறான்:

وَاذَا قُمْتَ فِيْهِمْ فَأَقَمْتَ لَهُمُ الصَّلاَةَ فَلْتَقُمْ طَائِفَةٌ مِّنْهُمْ مَّعَكَ وَ لْيَأْخُذُوْا أَسْلِحَتَهُمْ فَاذَا سَجَدُوْا فَلْيَكُوْنُوْا مِنْ وَّرَائِكُمْ وَلْتَأْتِ طَائِفَةٌ اُخْرٰى لَمْ يُصَلُّوْا فَلْيُصَلُّوْا مَعَكَ وَلْيَأْخُذُوْا حِذْرَهُمْ وَ أَسْلِحَتَهُمْ

"(நபியே,) நீர் முஸ்லிம்களிடையே இருக்கும்போது (போர் நிலையில்) அவர்களுக்குத் தொழவைப்பீராயின் அவர்களில் ஒரு குழுவினர் தங்களுடைய ஆயுதங்களை ஏந்திக்கொண்டு உம்மோடு நிற்க வேண்டும். பிறகு அவர்கள் ஸுஜூது செய்துமுடித்து விட்டால் பின்னால் சற்று விலகிச்சென்றிட வேண்டும். தொழாமல் இருக்கும் மற்றொரு குழுவினர் வந்து உம்மோடு தொழவேண்டும். அத்துடன் அவர்களும் முன்னெச் சரிக்கையாகத் தம் ஆயுதங்களை ஏந்திக்கொண்டிருக்க வேண்டும்" (குர்ஆன் 4 : 102)

தொழுகையை ஜமாத்துடன் நிறைவேற்றுவதை - போர் நடக்கும் நேரத்திலேயே அல்லாஹ் கடமையாக்கி இருக்கி றான் எனும்பொழுது அமைதிச் சூழ்நிலையில் சொல்லவும் வேண்டுமா?

ஜமாஅத்துடன் தொழுவதைக் கைவிடுவதில் யாருக்கா வது சலுகை அளிக்கப்படுவதாக இருந்தால் - எதிரிகளை நோக்கி அணிவகுத்து நிற்கக்கூடிய போர்வீரர்கள் சலுகை பெறுவதற்கு அதிகத் தகுதியுடையவர்களாவர். அவர்களுக்கே சலுகை அளிக்கப்படவில்லை என்பதிலிருந்து அதன் முக்கி யத்துவத்தை அறிந்து கொள்ளலாம். தொழுகையை ஜமாஅத் துடன் நிறைவேற்றுவது அதிமுக்கியக் கடமைகளுள் ஒன்றா

கும். ஜமாஅத்துடன் தொழாமல் இருப்பதற்கு எவருக்கும் அனுமதி இல்லை என்பதைப் புரிந்து கொள்ளலாம்.

عَـــنْ اَبِى هُرَيْرَةَ ﷺ عَنِ النَّبِيِّ ﷺ اَنَّهُ قَالَ : لَقَدْ هَمَمْتُ أنْ آمُرَ بِالصَّــــلاَةِ فَــتُقَامَ ثُمَّ آمُرَ رَجُلاً أنْ يُصَلِّيَ بَالنَّاسِ ثُمَّ أنْطَلِقَ بِرِجَالٍ مَعَهُـــمْ حَزَمٌ مِنْ حَطَبٍ اِلى قَوْمٍ لاَ يَشْهَدُوْنَ الصَّلاَةَ فَاُحْرِقَ عَلَيْهِمْ بُيُوْتَهُمْ ( رواه البخاري ومسلم)

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: " இப்படி ஓர் எண்ணம் எனக்கு வந்துவிட்டது. தொழுகைக்காக உத்தரவு பிறப்பித்து இகாமத் சொல்லப்பட வேண்டும்., பிறகு மக்களுக்குத் தொழுகை நடத்துமாறு ஒருவரை நான் ஏவி - பிறகு விறகு கட்டைகளுடன் சிலபேரை அழைத்துக் கொண்டு வந்து தொழுகைக்கு வராமல் இருப்பவர்களின் வீடுகளுக்குச் செல்ல வேண்டும்., அவ்வீடுகளினுள் அவர்கள் இருக்கவே அவற்றைத் தீயிட்டுக் கொளுத்த வேண்டும் (என்று ஓர் எண் ணம் எனக்கு வந்துவிட்டது)" (புகாரி)

عَــــنْ عَـــبْدَ الله بْـــنِ مَسْعُوْد ﷺ قَالَ : لَقَدْ رَأيْتُنَا وَمَا يَتَخَلَّفُ عَنِ الصَّـــلاَةِ الاَّ مُنَافِقٌ عُلِمَ نِفَاقُهُ أوْ مَرِيْضٌ وَانْ كَانَ الْمَرِيْضُ لَيَمْشِى بَيْنَ الرَّجُلَيْنِ حَتّى يَأتِيَ الصَّلاَةَ

அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்: "எங்கள் காலத்தில் என்ன நடந்ததெனில், நயவஞ்சகன்

என்று எல்லோராலும் அறியப்பட்டவரைத் தவிர அல்லது நோயாளியைத் தவிர வேறெவரும் தொழுகைக்கு வராமல் இருக்கமாட்டார்கள். அது மட்டுமல்ல, நோயாளி எனில் அவர் இரண்டு மனிதர்களின் உதவியுடன் நடந்து வருவார். தொழுகையில் கலந்து கொள்வார் “ (ஸஹீஹ் முஸ்லிம்)

وَقَالَ: انَّ رَسُوْلَ اللهِ ﷺ عَلَّمَنَا سُنَنَ الْهُدٰى وَ انَّ منْ سُنَنِ الْهُدٰى الصَّلاَةُ فِى الْمَسْجد الَّذى يُؤَذَّنُ فيه

மேலும் அவர்கள் அறிவிக்கிறார்கள்: “அண்ணல் நபி (ஸல்) அவர்கள் நேர்வழியின் நடைமுறைகளை எங்களுக்குக் கற்றுக்கொடுத்தார்கள். பாங்கு சொல்லப்படும் மஸ்ஜிதில் தொழுவதும் நேர்வழியின் நடைமுறைகளில் உள்ளதாகும் என்றும் சொல்லித்தந்தார்கள் “

وَفِيْهِ ايْضًا عنْهُ قَالَ: مَنْ سَرَّهُ اَنْ يَلْقَى اللهَ غَدًا مُسْلمًا فَلْيُحَافظْ عَلٰى هٰذه الصَّلَوَات حَيْثُ يُنَادٰى بهِنَّ فَانَّ اللهَ شَرَعَ لنَبيِّكُمْ سُنَنَ الْهُدٰى وَانَّهُنَّ منْ سُنَنِ الْهُدٰى وَلَوْ اَنَّكُمْ صَلَّيْتُمْ فِى بُيُوْتكُمْ كَمَا يُصَلِّى هٰذَا الْمُتَخَلِّفُ فِى بَيْته لَتَرَكْتُمْ سُنَّةَ نَبيِّكُمْ وَلَوْ تَرَكْتُمْ سُنَّةَ نَبيِّكُمْ لَضَلَلْتُمْ وَمَا منْ رَجُلٍ يَتَطَهَّرُ فَيُحْسنُ الطُّهُوْرَ ثُمَّ يَعْمَدُ الٰى مَسْجد منْ هٰذه الْمَسَاجد الاَّ كَتَبَ اللهُ لَهُ بكُلِّ خُطْوَة يَخْطُوْهَا حَسَنَةً وَيَرْفَعُ بهَا دَرَجَةً وَيَحُطُّ عَنْهُ بهَا سَيِّئَةً وَلَقَدْ رَأَيْتُنَا وَمَا

يَـــتَخَلَّفُ عَنْهَا الاَّ مُنَافِقٌ مَعْلُومُ النِّفَاقِ وَلَقَدْ كَانَ الرَّجُلُ يُؤْتَىٰ بِهَا يُهَادٰى بَيْنَ الرَّجُلَيْنِ حَتّٰى يُقَامَ فِى الصَّفِّ

மேலும் ஸஹீஹ் முஸ்லிமில் உள்ளது. இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்கள் அறிவித்துள்ளார்கள்: "எவர் நாளை மறுமையில் முஸ்லிமாகவே அல்லாஹ்வைச் சந்திப்பதில் மகிழ்ச்சி அடைகிறாரோ அவர் தொழுகைகளைப் பேணுதலுடன் நிறைவேற்றட்டும்., அவற்றிற்கென அழைப்பு விடுக்கப்படும் இடங்களில் சென்று தொழட்டும். திண்ணமாக உங்களுடைய நபிக்கு நேர்வழியின் நடைமுறைகளை அல்லாஹ் நிர்ணயித்துக் கொடுத்துள்ளான். இந்தத் தொழுகைகள் நேர்வழியின் நடைமுறைகளின்பாற் பட்டவைதான்.

ஒரு நயவஞ்சகனோ நோயாளியோ தனது வீட்டில் தொழுவதுபோன்று நீங்கள் உங்கள் வீடுகளில் தொழுவீர்கள் எனில் நிச்சயமாக நீங்கள் உங்கள் நபியின் ஸுன்னத்தைக் கைவிட்டவர்களாவீர்கள். உங்கள் நபியின் ஸுன்னத்தை நீங்கள் கைவிட்டீர்களானால் நிச்சயம் நீங்கள் வழி தவறிப்போவீர்கள்.

எவர் உளு செய்து - அதை நல்ல முறையில் செய்து கொண்டு பிறகு இந்த மஸ்ஜித்களில் ஒன்றை நாடி வருகிறாரோ அவருக்கு - அவர் எடுத்துவைக்கும் ஒவ்வொரு எட்டுக்குப் பதிலாக ஒரு நன்மையை அல்லாஹ் அவருக்கு எழுதாமல் இல்லை. ஒவ்வொரு எட்டுக்குப் பதிலாக ஓர் அந்தஸ்தை அவருக்கு உயர்த்தாமல் இல்லை. ஒவ்வொரு எட்டுக்குப் பதிலாக ஒரு தீமையை அவரை விட்டு அல்லாஹ்

அகற்றாமல் இல்லை. எங்கள் காலத்தில் என்ன நடந்தது தெரியுமா? பகிரங்கமாக அறியப்பட்ட நயவஞ்சகனைத்தவிர வேறுயாரும் தொழுகைக்கு வராமலிருக்கமாட்டார்கள். நோயுற்றிருக்கும் மனிதரை இருநபர்கள் கைத்தாங்கலாக அழைத்து வந்து ஸஃப்பில் (வரிசையில்) நிறுத்துவார்கள் "

عَــنْ اَبِى هُرَيْرَةَ ﷺ أنَّ رَجُلاً أعْمٰى قَالَ يَا رَسُوْلَ اللهِ اَنَّهُ لَيْسَ لِى قَائِدٌ يُلاَزِمُنِى اِلىٰ الْمَسْجِد فَهَلْ لِى رُخْصَةٌ أنْ اُصَلِّيَ فِى بَيْتِى؟ قَالَ لَهُ النَّبِيُّ ﷺ : هَلْ تَسْمَعُ النِّدَاءَ بَالصَّلاةِ؟ قَالَ : نَعَمْ قَالَ: فَأَجِبْ —

رواه مسلم

மேலும் அபூ ஹு ரைரா (ரலி) அவர்களிடம் இருந்து அறிவிக்கப்படுகிறது: " பார்வை இழந்த மனிதர் ஒருவர் வினவினார்: அல்லாஹ்வின் தூதரே, மஸ்ஜித் வரை என்னை அழைத்து வரக்கூடியவர் எவரும் எனக்கு இல்லை. எனவே எனது வீட்டில் தொழுவதற்கு எனக்கு அனுமதி உண்டா? அவரிடம் நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள்: தொழுகைக்கான (பாங்கு) அழைப்பை நீர் கேட்கிறீரா? அதற்கு அவர், 'ஆம்' என்றார். நபியவர்கள் சொன்னார்கள்: அப்படியாயின் அந்த அழைப்பிற்கு நீர் பதிலளிக்கும் வகையில் பள்ளிக்கு வரத்தான் வேண்டும் " (ஸஹீஹ் முஸ்லிம்)

ஜமாஅத்துடன் தொழுவது கடமை என்று அறிவிக்கக் கூடிய நபிமொழிகள் ஏராளம் இருக்கின்றன. எந்த இல்லங்களை உயர்த்துவதற்கும் அங்கே தனது பெயர் நினைவு கூரப்படுவதற்கும் அல்லாஹ் அனுமதி அளித்துள்ளானோ

அந்த இறையில்லங்களுக்கு வந்து தொழுகையை நிலை நாட்டுவது கடமை என்று அறிவிக்கக்கூடிய ஹதீஸ்கள் நிறைய உள்ளன. ஜமாஅத் தொழுகைக்கு முக்கியத்துவம் அளிப்பதும் அதன்பால் விரைந்து செல்வதும் ஒவ்வொரு முஸ்லிமின் மீதும் கடமையாகும். தொழுகையைப் பேணிக் கடைப்பிடிக்குமாறு தம் பிள்ளைகளுக்கும் குடும்பத்தினருக்கும் அண்டை வீட்டினருக்கும் ஏனைய முஸ்லிம் சகோதரர்களுக்கும் அறிவுரை வழங்குவதும் கடமையாகும். ஏனெனில் அல்லாஹ் - ரஸூலின் கட்டளைக்குக் கீழ்ப்படிவதும் அல்லாஹ்வும் ரஸூலும் தடைசெய்தவற்றில் இருந்து விலகுவதும் அவசியமாகும். மேலும் நயவஞ்சகர்களைப்போல் செயல்படுவதைத் தவிர்ப்பது கட்டாயமாகும். அந்த நயவஞ்சகர்களை மிக இழிவான செயல்களுடையவர்கள் என்று அல்லாஹ் வர்ணித்துள்ளான். அந்தச் செயல்களிலேயே மிகவும் கீழான செயல், தொழுகை குறித்து அவர்கள் சோம்பலாக இருப்பதுதான். குர்ஆனில் அல்லாஹ் கூறுகிறான்:

انَّ الْمُنَافِقِيْنَ يُخَادِعُوْنَ اللهَ وَهُوَ خَادِعُهُمْ وَ اِذَا قَامُوْا اِلَى الصَّلَاةِ قَامُوْا كُسَالٰى يُرَآءُوْنَ النَّاسَ وَلَا يَذْكُرُوْنَ اللهَ اِلَّا قَلِيْلًا ، مُذَبْذَبِيْنَ بَيْنَ ذٰلِكَ لَآ اِلٰى هٰؤُلَاءِ وَلَا اِلٰى هٰؤُلَاءِ ، وَمَنْ يُضْلِلِ اللهُ فَلَنْ تَجِدَ لَهُ سَبِيْلًا

"இந்த நயவஞ்சகர்கள் அல்லாஹ்வை ஏமாற்றுகிறார்கள். உண்மையில் அவனே இவர்களை ஏமாற்றத்திற்கு உள்ளாக்குகிறான். இவர்கள் தொழுகைக்காக எழுந்து நின்றால் சோம்பல் பட்டுக்கொண்டே நிற்கிறார்கள். மக்களுக்குக்

காட்டிக்கொள்ளவே தொழுகிறார்கள். மேலும் அல்லாஹ்வை மிகக் குறைவாகவே நினைவு கூர்கிறார்கள். (முழுமையாக இவர்களோடும் இல்லாமல் அவர்களோடும் இல்லாமல்) இறை நம்பிக்கைக்கும் நிராகரிப்பும் இடையில் தடுமாறுகிறார்கள். அல்லாஹ் எவனை வழிகெடுக்கிறானோ அவனை (நேர்வழிப் படுத்த) வேறு எந்த வழியையும் நீர் காணமாட்டீர்"(4:142-143)

தொழுகையை ஜமாஅத்துடன் நிறைவேற்றச் செல்லாமல் இருப்பது தொழுகையை ஒரேயடியாக விட்டுவிடத் தூண்டும் காரணிகளில் பெரியதொரு காரணமாகும். தொழுகையை விடுவது குஃப்ர் எனும் இறைநிராகரிப்பாகவும் வழிகேடாகவும் இஸ்லாத்தின் வட்டத்தை விட்டு வெளியெறுவதாகவும் இருக் கிறது என்பது யாவரும் அறிந்ததே! ஏனெனில் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

بَيْنَ الرَّجُلِ وَبَيْنَ الْكُفْرِ وَالشِّرْكِ تَرْكُ الصَّلَاةِ (أخرجه مسلم في صحيحه عن جابر ﷺ)

"ஒரு மனிதன் நிராகரிப்பிலும் இணைவைப்பிலும் இருக் கிறான் என்பதன் அடையாளம் தொழுகையை விடுவதே ஆகும்" (நூல்: முஸ்லிம். அறிவிப்பு: ஜாபிர் (ரலி) அவர்கள்)

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "நம்மர் களுக்கும் அவர்களுக்கும் இடையே பிரிக்கும் ஓர் ஒப்பந்தம் தொழுகையே ஆகும். எனவே தொழுகையை விட்டவர் நிரா கரித்தவர் ஆவார் "

தொழுகையின் அந்தஸ்தை உயர்த்தக்கூடிய -மேலும் அதைப் பேணுவது, அல்லாஹ் கட்டளையிட்டபடி அதை நிறைவேற்றுவது ஆகியன கடமை என உணர்த்தக் கூடிய வசனங்களும் திருநபியின் பொன்மொழிகளும் ஏராளமாகவும் பிரபலமாகவும் உள்ளன.

எனவே தொழுகைகளை உரிய நேரங்களில் கடைப்பிடிப் பதும் அல்லாஹ் நிர்ணயித்த முறையில் அவற்றை நிலைநாட்டு வதும் இறையில்லங்களில் தம் சகோதரர்களுடன் சேர்ந்து ஜமாஅத்தாக அவற்றை நிறைவேற்றுவதும் ஒவ்வொரு முஸ் லிம் மீதும் கடமையாகும்., அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் கீழ்ப்படியும் பொருட்டு! அல்லாஹ்வின் கோபத்தை விட்டும் துன்புறுத்தும் தண்டனையை விட்டும் விலகிடும் பொருட்டு!

சத்தியம் வெளிப்பட்டுவிட்டபோது - அதன் ஆதாரங்கள் தெள்ளத் தெளிவாகி விட்டபோது இவர் சொன்னார், அவர் சொன்னார் என்பதற்காவெல்லாம் சத்தியத்திலிருந்து விலகிச் செல்வது யாருக்கும் கூடாது. ஏனெனில் அல்லாஹ் கூறு கிறான்:

فَاِنْ تَنَازَعْتُمْ فِى شَيْءٍ فَرُدُّوْهُ اِلَى اللهِ وَالرَّسُوْلِ اِنْ كُنْتُمْ تُؤْمِنُوْنَ بِاللهِ وَالْيَوْمِ الْآخِرِ ، ذَلِكَ خَيْرٌ وَّ أَحْسَنُ تَأْوِيْلاً

"பின்னர் ஏதேனும் ஒரு விவகாரத்தில் நீங்கள் கருத்து வேறுபாடு கொண்டால் அதனை அல்லாஹ்விடமும் அவனு டைய தூதரிடமும் திருப்பி விடுங்கள். நீங்கள் அல்லாஹ்வின் மீதும் மறுமை நாளின் மீதும் நம்பிக்கை கொண்டோராயின்

இதுதான் சரியான வழிமுறையாகும். இறுதி விளைவைக் கருத்தில் கொண்டும் இதுவே சிறந்ததாகும்" ( 4 : 59) மேலும் அல்லாஹ் கூறுகிறான்:

فَلْيَحْذَرِ الَّذِيْنَ يُخَالِفُوْنَ عَنْ أَمْرِه أَنْ تُصِيْبَهُمْ فِتْنَةٌ أَوْ يُصِيْبَهُمْ عَذَابٌ أَلِيْمٌ

"இறைத்தூதரின் கட்டளைக்கு மாறுசெய்பவர்கள் தங்களுக்கு ஏதேனும் கடும் சோதனை நேர்ந்து விடுமோ, தம் மீது துன்புறுத்தும் வேதனை வந்து விடுமோ என்று அஞ்சட்டும் " (24 : 63)

ஜமாஅத்துடன் தொழுவதில் அதிகமான நன்மைகளும் ஏராளமான நலன்களும் உள்ளன என்பது வெளிப்படை. அவற்றுள் மிகவும் தெளிவான நன்மைகள்., பரஸ்பர அறிமுகம், நன்மைக்காகவும் இறையச்சத்திற்காகவும் ஒருவருக்கொருவர் உதவுவது, சத்தியத்தைக் கடைப்பிடிக்குமாறும் அதன் பேரில் பொறுமையை மேற்கொள்ளுமாறும் ஒருவருக்கொருவர் அறிவுறுத்துவது ஆகியனவாகும்.

மட்டுமல்ல,தொழுகைக்கு வராமலிருப்பவருக்குத் தொழுகையின்பால் ஆர்வமூட்டுதல், அறியாதவருக்குக் கற்றுக் கொடுத்தல், நயவஞ்சகர்களுக்கு எரிச்சலூட்டச்செய்தல், அவர்களின் வழியை விட்டு விலகுதல், அல்லாஹ்வின் வழிபாட்டுமுறைகளை மனிதர்களிடையே பிரபலப்படுத்துதல், சொல்லாலும் செயலாலும் அல்லாஹ்வின் பக்கம் அழைப்பு விடுத்தல் இவை

போன்ற இன்னும் பல நன்மைகளும் ஜமாஅத் தொழுகையில் உள்ளன.

இறைஉவப்பையும் இம்மை மறுமை நற்பேறுகளையும் அடைய அல்லாஹ் நமக்கு அருள் புரியட்டும். அகத்தீமைகளில் இருந்தும் செயல்களில் நிகழும் குறைபாடுகளில் இருந்தும் மேலும் நிராகரிப்பாளர்களுடனும் நயவஞ்சகர்களுடனும் ஒப்பாய் ஆகுவதை விட்டும் அல்லாஹ் நம்மைக் காத்தருளட்டும். அவன் கண்ணியமிக்கவன். கொடையாளன்.

வஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மத்துல்லாஹ்.

# اَلْوُضُوْءُ وَالْغُسْلُ وَالصَّلَاةُ

لسماحة الشيخ محمد بن صالح العثيمين رحمه الله

# உளூ - குளிப்பு - தொழுகை

குர்ஆன் - ஹதீஸில் கூறப்பட்டுள்ளபடி உளூ, குளிப்பு மற்றும் தொழுகை ஆகியவை பற்றி விவரிக்கும் சிற்றேடாகும் இது.

## உளூ

உளூ என்பது அங்க சுத்தமாகும். சிறுநீர் - மலம் கழித்தல், காற்றுப் பிரிதல், ஆழ்ந்த உறக்கம் மற்றும் ஒட்டக இறைச்சி உண்ணல் ஆகியவற்றினால் ஏற்படும் சிறு துடக்கை நீக்குவதற்கு இந்த சுத்தத்தைக் கட்டாயம் மேற்கொள்ள வேண்டும்.

## உளூ செய்யும் முறை

1. உளூ செய்வதாக மனதில் நினைக்க வேண்டும். இதற்கு நிய்யத் என்பர். இதை நாவால் சொல்ல வேண்டியதில்லை. ஏனெனில் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தமது உளூவிலோ தொழுகையிலோ - வேறு எந்த வழிபாட்டிலும் நிய்யத் எனும் எண்ணத்தை நாவால் மொழிந்ததில்லை. மேலும் மனதில் உள்ளதை அல்லாஹ் அறிந்து கொள்கிறான். எனவே மனதில் எண்ணுவதை அறிவிக்க வேண்டியதில்லை.

2. பிஸ்மில்லாஹ் (அல்லாஹ்வின் திருப்பெயரால் ...) என்று சொல்ல வேண்டும்.

3. கைகளை மணிக்கட்டு வரை மூன்று தடவை கழுவ வேண்டும்.

4. தண்ணீர் கொண்டு மூன்று தடவை வாய் கொப்பளிக்க வேண்டும். மூக்கையும் மூன்று தடவை சுத்தம் செய்ய வேண்டும்.

5. முகத்தை மூன்று தடவை கழுவ வேண்டும். அகலத்தால் - ஒரு காதில் இருந்து மறு காது வரையில்., நீளத்தால் - தலைமுடி முளைக்கும் இடத்தில் இருந்து தாடியின் கீழ்ப் பகுதி வரையில் கழுவ வேண்டும்.

6. இரண்டு கைகளையும் - விரல் நுனியிலிருந்து முழங்கைகள் வரை மூன்று தடவை கழுவ வேண்டும். முதலில் வலது கையையும் பிறகு இடது கையையும் கழுவ வேண்டும்.

7. தலையை ஒரு தடவை நீரால் தடவ வேண்டும். அதாவது, இரண்டு கைகளையும் நனைத்து முன் தலையில் இருந்து பிற்பகுதி வரை கொண்டு செல்ல வேண்டும். பிறகு முற்பகுதிக்குத் திரும்பக் கொண்டு வர வேண்டும்.

8. இரண்டு காதுகளையும் நீரால் ஒரு தடவை தடவ வேண்டும். ஆட்காட்டி விரலை காதின் துவாரத்தில் புகுத்தி உட்பகுதியை தடவ வேண்டும். பெருவிரலைக் கொண்டு காதின் வெளிப் பகுதிகளைத் தடவ வேண்டும்.

9. இரண்டு கால்களை மூன்று தடவை கழுவ வேண்டும்.,
விரல் நுனிகளில் இருந்து கணுக்கால் வரையில்., முதலில் வலது காலையும் பிறகு இடது காலையும் கழுவ வேண்டும்.

# குளிப்பு

விந்து வெளிப்படுதல் மற்றும் மாதவிடாய் போன்றவற்றால் பெருந்துடக்கு ஏற்பட்டால் கண்டிப்பாகக் குளித்துத் தூய்மை யாகிட வேண்டும்.

# குளிப்பு முறை

1. குளிப்பதாக மனதில் நினைக்க வேண்டும். இதற்கு நிய்யத் என்பர். இதை நாவால் சொல்ல வேண்டியதில்லை.

2. பிஸ்மில்லாஹ் (அல்லாஹ்வின் திருப்பெயரால் ...) என்று சொல்ல வேண்டும்.

3. முழுமையான முறையில் உளூ செய்ய வேண்டும்.

4. தலையில் தண்ணீர் ஊற்ற வேண்டும். தலையை நனைத்த பிறகு அதன் மீது மூன்று தடவை தண்ணீரை ஓடச் செய்ய வேண்டும்.

5. பிறகு உடல் முழுவதையும் கழுவ வேண்டும்.

# தயம்மும்

தயம்மும்: இது உளூ மற்றும் குளிப்பிற்கு பதிலாக மண் ணைக் கொண்டு மேற்கொள்ளப்படும் கட்டாய சுத்தம் ஆகும். தண்ணீர் கிடைக்காதவரோ அதைப் பயன்படுத்து வதால் தொல்லை ஏற்படும் என்று அஞ்சுபவரோ இதனைச் செய்ய வேண்டும்.

# தயம்மும் செய்யும் முறை

உளூவுக்குப் பதிலாக அல்லது குளிப்பிற்குப் பதிலாக **தயம்மும் செய்கிறேன்** என்று மனதில் நினைக்க வேண்டும். பிறகு தரையில் அல்லது தரையோடு சேர்ந்திருக்கும் சுவர்களில் கைகளால் அடிக்க வேண்டும். முகத்திலும் கைகளிலும் தடவிக்கொள்ள வேண்டும்.

# தொழுகை

தொழுகை என்பது சில சொற்கள் மற்றும் செயல்களைக் கொண்ட வழிபாடாகும். இதன் தொடக்கம் **அல்லாஹு அக்பர்** என்று தக்பீர் சொல்வதும் இதன் முடிவு **அஸ்ஸலாமு அலைக்கும்** என்று ஸலாம் கொடுப்பதும் ஆகும்.

ஒருவர் தொழுகைக்குச் செல்ல விரும்பினால், சிறு துடக்கு உடையவராயின் உளூ செய்வது அவர் மீது கடமை. பெருந் துடக்கு உடையவராயின் குளிப்பது அவர் மீது கடமை.

அவருக்குத் தண்ணீர் கிடைக்கவில்லையாயின் அல்லது தண்ணீரைப் பயன்படுத்துவதால் தொல்லை ஏற்படும் என்றிருந்தால் தயம்மும் செய்வது கடமையாகும்.

மேலும் அவரது உடல், உடை, தொழும் இடம் ஆகியவற்றை அசுத்தம் படாமல் பாதுகாக்க வேண்டும்.

# தொழுகை முறை

1. கிப்லா எனும் கஃபா ஆலயத்தின் திசையை தனது முழு உடலைக்கொண்டு முன்னோக்கிட வேண்டும். ஒரு பக்கமாகச் சாய்வதோ திரும்புவதோ கூடாது.

2. தொழுதிட விரும்பும் தொழுகையை மனதில் நினைக்க வேண்டும். அதை நாவால் சொல்ல வேண்டியதில்லை.

3. அல்லாஹு அக்பர் என்று சொல்லி தொழுகையைத் தொடங்க வேண்டும். அப்போது இரண்டு கைகளையும் புஜங் களுக்கு நேராக உயர்த்திட வேண்டும்.

4 வலது கை மணிக்கட்டை இடது கை மணிக்கட்டின் மீது வைத்து நெஞ்சின் மேல் கட்டிக்கொள்ள வேண்டும்.

5. பின்வரும் ஆரம்ப துஆவை ஓத வேண்டும்.

| | |
|---|---|
| அல்லாஹு ம்ம பாஇத் | اَللّٰهُمَّ بَاعِدْ |
| பைனீ வ பைன கத்(த்)தாயாய | بَيْنِي وَبَيْنَ خَطَايَايَ |
| கமா பாஅத்த | كَمَا بَاعَدْتَّ |
| பைனல் மஷ்ரிகி வல் மஃக்ரிபி | بَيْنَ الْمَشْرِقِ وَالْمَغْرِبِ |
| அல்லாஹு ம்ம நக்கினீ மின் கத்(த்)தாயாய | اَللّٰهُمَّ نَقِّنِي مِنْ خَطَايَايَ |
| கமா யுனக்கஸ் ஸவ் புல் அப்யளு | كَمَا يُنَقَّى الثَّوْبُ الْاَبْيَضُ |

| | |
|---|---|
| மினத் தனஸி | مِنَ الدَّنَسِ |
| அல்லாஹு ம் மக்ஸ்ஸில்னீ | اَللّٰهُمَّ اغْسِلْنِي |
| மின் கத் (த்) தாயாய | مِنْ خَطَايَايَ |
| பில் மாயி வஸ் ஸல்ஜி வல் பரத் | بِالْمَاءِ وَالثَّلْجِ وَالْبَرَدِ |

(பொருள்: இறைவனே! எனக்கும் என்னுடைய தவறுகளுக்கும் மத்தியில் இடைவெளியை ஏற்படுத்துவாயாக! கிழக்கிற்கும் மேற்கிற்கும் மத்தியில் நீ இடைவெளியை எற்படுத்தியது போன்று! இறைவனே, என் தவறுகளை விட்டும் என்னைத் தூய்மைப்படுத்துவாயாக., வெள்ளை ஆடையை அழுக்கில் இருந்து தூய்மைப்படுத்துவது போன்று! இறைவனே, தண்ணீர், பனி மற்றும் பனிக்கட்டி கொண்டு என்னைக் கழுவி என் குற்றங்களைப் போக்குவாயாக!)

இந்த துஆவுக்குப் பகரமாக பின்வரும் திக்ரையும் ஓதலாம்:

| | |
|---|---|
| ஸு ப்ஹான (க்) கல் லாஹு ம்ம வபி ஹம் தி (க்) க | سُبْحَانَكَ اللّٰهُمَّ وَبِحَمْدِكَ |
| வதபார (க்) கஸ்மு (க்) க | وَتَبَارَكَ اسْمُكَ |

| | |
|---|---|
| வதஆலா ஜத்து(க்)க | وَتَعَالٰى جَدُّكَ |
| வ லா இலாஹ ஃகை ரு(க்)க | وَلَا اِلٰهَ غَيْرُكَ |

(பொருள்: யா அல்லாஹ், உன்னைப் புகழ்வதுடன் துதிக்கவும் செய்கிறேன். உனது திருப்பெ யர் அருட்பேறு டையது. உனது ஆற்றல் மிகவும் உயர்ந்தது. உன்னைத் தவிர வணக்கத்திற்குரிய இறைவன் வேறு யாரும் இல்லை)

6. அஊது பில்லாஹி மினஷ் ஷைத்தானிர் ரஜீம் என்று ஓத வேண்டும்.

7. பிறகு பிஸ்மில்லாஹ்வுடன் ஃபாத்திஹா அத்தியா யத்தை ஓத வேண்டும். அது வருமாறு:

| | |
|---|---|
| பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம் | بِسْمِ اللهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ |

| | |
|---|---|
| அல் ஹம்து லில்லாஹி | اَلْحَمْدُ لِلّٰهِ |
| றப்பில் ஆலமீன் | رَبِّ الْعَالَمِيْنَ O |
| அர் ரஹ்மானிர் ரஹீம் | اَلرَّحْمٰنِ الرَّحِيْمِ O |
| மாலி(க்)கி யவ்மித்தீன் | مَالِكِ يَوْمِ الدِّيْنِ O |
| இய்யா(க்)க நஅ்புது வ இய்யா(க்)க நஸ்தஈன் | اِيَّاكَ نَعْبُدُ وَاِيَّاكَ نَسْتَعِيْنُ O |

| | |
|---|---|
| இஹ்தினஸ் ஸிறாத்(த்) தல் முஸ்தகீம் | اهْدِنَا الصِّرَاطَ الْمُسْتَقِيْمَ ۝ |
| ஸிறாத்(த்)த்தல்லதீன அன்அம்(த்)த அலை ஹிம் | صِرَاطَ الَّذِيْنَ اَنْعَمْتَ عَلَيْهِمْ ۝ |
| ஃகைரில் மஃக்ளூபி அலைஹிம் | غَيْرِ الْمَغْضُوْبِ عَلَيْهِمْ |
| வலள் ளால்லீன் | وَلاَ الضَّالِّيْنَ ۝ آمِيْنْ |

(பொருள்: எல்லாப் புகழும் அனைத்துலகையும் படைத்துப் பரிபாலிக்கக்கூடிய அல்லாஹ்வுக்கே! அவன் மாபெரும் கரு ணையாளன். தனிப்பெரும் கிருபையாளன். கூலி கொடுக்கும் நாளின் அதிபதி. உன்னையே நாங்கள் வணங்குகிறோம். மேலும் உன்னிடமே நாங்கள் உதவி தேடுகிறோம். எங் களை நீ நேரான வழியில் செலுத்துவாயாக! (அது) எவர் களுக்கு நீ அருள் புரிந்தாயோ அவர்களின் வழி. உனது கோபத்திற்கு ஆளாகாத மற்றும் நெறிகெட்டுப்போகாதவர் களின் வழி) - பிறகு **ஆமீன்** என்று கூறவேண்டும். இதன் பொருள்: யா அல்லாஹ், ஏற்றுக்கொள்வாயாக!

8. குர்ஆனில் நன்கு தெரிந்த, இலகுவான வசனங்களை ஓத வேண்டும். ஸுப்ஹு தொழுகையில் நீண்ட நேரம் ஓத வேண்டும்.

9. பிறகு ருகூஉ செய்ய வேண்டும். அதாவது அல்லாஹ் வின் திருமுன்னால் பணிவையும் மரியாதையையும் வெளிப் படுத்தும் வகையில் குனிந்து நிற்க வேண்டும். ருகூவுக்குக்

காக குனியும்போது அல்லாஹு அக்பர் என்று சொல்ல வேண்டும். இரண்டு கைகளையும் புஜத்திற்கு நேராக உயர்த்த வேண்டும். ஸுன்னத்-நபிவழி யாதெனில், முதுகை வளைத்துக் குனிந்து, தலையை முதுகு மட்டத்திற்குச் சம மாக வைத்திருப்பதாகும். இரண்டு கைகளைக் கொண்டு - விரல்கள் விரித்திருக்கும் நிலையில் - முட்டுக்கால்களைப் பிடித்துக் கொண்டிருக்க வேண்டும்.

10. ருகூஉ - வில் سُبْحَانَ رَبِّيَ الْعَظِيْمِ (ஸுப்ஹான றப்பியல் அழீம்) என்று ஓத வேண்டும். (பொருள்: மகத்துவமிக்க என் இறைவனைத் தூயவன் என்கிறேன்) இந்த திக்ருடன் -

| | |
|---|---|
| ஸுப்ஹானக்கல்லாஹும்ம வபி ஹம்திக்க | سُبْحَانَكَ اللَّهُمَّ وَبِحَمْدِكَ |
| அல்லாஹும்மஃக்ஃபிர்லீ | اَللَّهُمَّ اغْفِرْلِي |

(பொருள்: யா அல்லாஹ், உன்னைப் புகழ்வதுடன் தூய வன் நீ என்றும் துதிக்கிறேன். யா அல்லாஹ், என்னை மன்னிப்பாயாக) என்றும் ஓதினால் அது நல்லதாகும்.

11. ஸமிஅல்லாஹு லிமன் ஹமிதாஹ் سَمِعَ اللهُ لِمَنْ حَمِدَهُ (பொருள்: தன்னைப் புகழ்வதை அல்லாஹ் கேட்டுக் கொண் டான்) என்று சொல்லியவாறு ருகூஉ-வில் இருந்து தலையை உயர்த்த வேண்டும். அப்போது இரண்டு கைகளையும் புஜத் திற்கு நேராக உயர்த்த வேண்டும். பின்பற்றித் தொழுபவர் - ஸமிஅல்லாஹு லிமன் ஹமிதாஹ் எனும் திக்ரை சொல்ல வேண்டாம். அதற்கு பதிலாக

رَبَّنَا وَلَكَ الْحَمْدُ

றப்பனா வலக்கல் ஹம்த் (பொருள்: எங்கள் இறைவா, மேலும் புகழ் அனைத்தும் உனக்கே) என்று சொல்ல வேண்டும்.

12. பிறகு நிலைக்கு உயர்ந்ததும்

| | |
|---|---|
| றப்பனா வல(க்)கல் ஹம்து | رَبَّنَا وَ لَكَ الْحَمْدُ |
| மில் அஸ்ஸமாவாத்தி | مِلْأَ السَّمَاوَاتِ |
| வ மில்அல் அர்ளி வ மில்அ மாபைன ஹுமா | وَمِلْأَ الأَرْضِ وَمِلْأَ مَا بَيْنَهُمَا |
| வ மில்அ மாஷிஅத்த | وَمِلْأَ مَا شِئْتَ |
| மின் ஷையின் பஅத் | مِنْ شَيْءٍ بَعْدُ |

(பொருள்: எங்கள் இறைவனே, மேலும் புகழ் அனைத்தும் உனக்கே! வானங்கள் நிரம்ப, பூமி நிரம்ப, அவ்விரண்டில் உள்ள பொருள்கள் நிரம்ப. இதற்குப் பிறகு நீ விரும்பும் அத்தனை பொருள்கள் நிரம்ப அனைத்துப்புகழும் (உனக்கே சொந்தம்)

13. பிறகு அல்லாஹ்வின் திருமுன் அச்சத்தோடு ஸுஜூது செய்ய வேண்டும். இது முதல் ஸுஜூது ஆகும். ஸுஜூதுக்காகக் குனியும்போது அல்லாஹு அக்பர் என்று சொல்ல வேண்டும். மூக்கு, நெற்றி, இரண்டு உள்ளங் கைகள், இரண்டு முட்டுக்கால்கள், பாதங்களின் விரல்கள்

ஆகிய ஏழு உறுப்புகள் பூமியில் படும் வகையில் ஸுஜூது அமைந்திட வேண்டும்.

குடங்கைகளை விலாவை விட்டு விரித்து வைக்க வேண்டும். முழங்கைகளைப் பூமியில் பரப்பி வைக்கக் கூடாது. விரல் நுனிகளை கிப்லாவை முன்னோக்கி வைக்க வேண்டும்.

14. ஸுஜூது செய்யும்போது,

**ஸுப்ஹான றப்பியல் அஃலா** سُبْحَانَ رَبِّيَ الأَعْلَى (பொருள்: மிக உயர்ந்தவனாகிய என் இறைவனைத் தூயவன் எனத் துதிக்கிறேன்) எனும் தஸ்பீஹை மூன்று தடவை சொல்ல வேண்டும். அத்துடன் -

| | |
|---|---|
| ஸுப்ஹான கல்லாஹும்ம வபிஹம்திக்க | سُبْحَانَكَ اللَّهُمَّ وَبِحَمْدِكَ |
| அல்லாஹும்மஃக்பிர்லீ | اَللَّهُمَّ اغْفِرْلِي |

(பொருள்: யா அல்லாஹ், உன்னைப் புகழ்வதுடன் தூயவன் என்றும் துதிக்கிறேன். யா அல்லாஹ், என்னை மன்னிப்பாயாக) என்று ஓதுவது நல்லது.

15. பிறகு **அல்லாஹு அக்பர்** என்று சொல்லியவாறு ஸுஜூதில் இருந்து தலையை உயர்த்த வேண்டும்.

16. இரண்டு ஸஜ்தாக்களுக்கு மத்தியில் அமர வேண்டும். இடது பாதத்தின் மீது உட்காரவேண்டும். வலது பாதத்தை நட்டு வைத்திருக்க வேண்டும். வலது கையை வலது தொடையின் மீது- முட்டுக்காலை ஒட்டினாற்போல் - வைக்க வேண்டும். வலது கையின் சுண்டு விரலையும் மோதிர விரலையும் மடக்கி ஆட்காட்டி விரலை உயர்த்தி - இந்த அமர்வின் துஆவின்போது அந்த விரலை அசைக்க வேண்டும்.

அப்போது பெருவிரல் நுனியை நடுவிரல் நுனியுடன் சேர்த்து வளையம் போல் வைத்துக் கொள்ள வேண்டும். இடது கையை - விரல்கள் விரித்த நிலையில் இடது தொடையின் மீது- முட்டுக்காலை ஒட்டினாற்போல் - வைக்க வேண்டும்.

17. இரண்டு ஸஜ்தாவுக்கு மத்தியிலான அமர்வில் இந்த துஆவை ஓத வேண்டும்:

| | |
|---|---|
| றப்பிஃக் ஃபிர்லீ வர் ஹம்னீ | رَبِّ اغْفِرْلِي وَارْحَمْنِي |
| வஹ்தினீ வர் ஸு க்னீ | وَاهْدِنِي وَارْزُقْنِي |
| வஜ்புர்னீ வ ஆஃபினீ | وَاجْبُرْنِي وَعَافِنِي |

(பொருள்: என் இறைவனே, என்னை மன்னித்தருள். எனக்கு கிருபை செய். எனக்கு நேர்வழி காட்டு. எனக்கு ரிஜ்க் வழங்கு. என் குறைகளை நிவர்த்தி செய். எனக்கு சுகம் அளித்திடு)

18. பிறகு அல்லாஹ்வின் திருமுன் பணிந்து இரண்டாவது ஸஜ்தா செய்ய வேண்டும். செய்முறையிலும் ஓதும் விஷயத்திலும் முதல் ஸஜ்தாவில் செய்ததுபோன்று செய்ய வேண்டும். ஸு ஜூ துக்கு செல்லும்போது அல்லாஹு அக்பர் என்று சொல்ல வேண்டும்.

19. இரண்டாவது ஸஜ்தாவில் இருந்து அல்லாஹு அக்பர் என்று சொல்லிக்கொண்டு எழுந்திருக்க வேண்டும். இரண் டாவது ரக்அத் தொழ வேண்டும். செய்முறையிலும் ஓத வேண்டியவற்றிலும் முதல் ரக்அத்தைப் போன்று செய்ய வேண்

டும். ஆயினும் இந்த ரக்அத்தில் ஆரம்ப துஆ ஓத வேண்டி யதில்லை.

20. பிறகு இரண்டாது ரக்அத் முடிந்த பின்பு அல்லாஹு அக்பர் என்று சொல்லிக்கொண்டு அமர வேண்டும். இரண்டு ஸஜ்தாக்களுக்கு நடுவே அமர்ந்திருந்தது போன்று இங்கு அமர்ந்திருக்க வேண்டும்.

21. இந்த அமர்வில் அத்தஹிய்யாத் எனும் பின்வரும் திக்ரை ஓத வேண்டும்:

| | |
|---|---|
| அத்தஹிய்யாத்து லில்லாஹி வஸ் ஸல வாத்து | اَلتَّحِيَّاتُ لِلّٰهِ وَالصَّلَوَاتُ |
| வு(த்)த்தய்யிபாத்து | وَالطَّيِّبَاتُ |
| அஸ்ஸலாமு அலைக்க அய்யுஹன் நபிய்யு | اَلسَّلاَمُ عَلَيْكَ أَيُّهَا النَّبِيُّ |
| வ ரஹ்மத்துல்லாஹி வ பரகாத்துஹு | وَ رَحْمَةُ اللهِ وَ بَرَكَاتُهُ |
| அஸ்ஸலாமு அலைனா | اَلسَّلاَمُ عَلَيْنَا |
| வ அலா இபாதில்லா ஹிஸ் ஸாலிஹீன் | وَ عَلٰى عِبَادِ اللهِ الصَّالِحِيْنَ |
| அஷ்ஹது அ(ன்ல்)லா இலாஹ இல்லல்லாஹு | اَشْهَدُ اَنْ لاَّ اِلٰهَ اِلاَّ اللّٰهُ |

| | |
|---|---|
| வ அஷ்ஹது அன்ன முஹம்மதன் | وَاَشْهَدُ اَنَّ مُحَمَّدًا |
| அப்துஹு வரஸூ லுஹு | عَبْدُهُ وَرَسُوْلُهُ |

(பொருள்: காணிக்கைகள், வணக்கங்கள், மற்றும் நற்பணி கள் அனைத்தும் அல்லாஹ்வுக்கே உரியவையாகும். நபியே, அமைதியும் அல்லாஹ்வின் கருணையும் அருட்பேறுகளும் உங்கள் மீது உண்டாகட்டும். எங்கள் மீதும் அல்லாஹ்வின் நல்லடியார்கள் மீதும் அமைதி உண்டாகட்டும். வணக்கத் திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை என்றும் முஹம்மத் நபியர்கள் அல்லாஹ்வின் அடி யார், தூதர் என்றும் நான் சாட்சியம் சொல்கிறேன்) தொடர்ந்து -

| | |
|---|---|
| அல்லாஹும்ம ஸல்லி அலா முஹம்மதின் | اَللّٰهُمَّ صَلِّ عَلٰى مُحَمَّدٍ |
| வஅலா ஆலி முஹம்ம தின் | وَ عَلٰى آلِ مُحَمَّدٍ |
| கமாஸல்லைத்த அலா இப்றாஹீம | كَمَا صَلَّيْتَ عَلٰى اِبْرَاهِيْمَ |
| வ ஆலி இப்றாஹீம | وَ آلِ اِبْرَاهِيْمَ |
| இன்னக்க ஹமீது (ன்)ம் மஜீத் | اِنَّكَ حَمِيْدٌ مَجِيْدٌ |
| வ பாரிக் அலா முஹம்ம தின் | وَبَارِكْ عَلٰى مُحَمَّدٍ |

| | |
|---|---|
| வஅலா ஆலி முஹம்ம தின் | وَعَلٰى آلِ مُحَمَّدٍ |
| கமா பாரக்கத்த அலா இப்றாஹீம | كَمَا بَارَكْتَ عَلٰى اِبْرَاهِيْمَ |
| வ ஆலி இப்றாஹீம | وَ آلِ اِبْرَاهِيْمَ |
| இன்னக்க ஹமீது(ன்)ம் மஜீத் | اِنَّكَ حَمِيْدٌ مَجِيْدٌ |

(பொருள்: யா அல்லாஹ், முஹம்மத் நபி மீதும் அவர்களின் வழிவந்தவர்கள் மீதும் கருணை பொழிவாயாக! இப்றாஹீம் நபி மீதும் அவர்களின் வழிவந்தவர்கள் மீதும் நீ கருணை பொழிந்ததுபோன்று! நிச்சயமாக நீ புகழுக்கும் மகத்துவத்திற் கும் உரியவன். யா அல்லாஹ், முஹம்மத் நபி மீதும் அவர் களின் வழிவந்தவர்கள் மீதும் அருட்பேறுகள் பொழிவாயாக, இப்றாஹீம் நபி மீதும் அவர்களின் வழிவந்தவர்கள் மீதும் அருட்பாக்கியங்கள் பொழிந்தது போன்று! நிச்சயமாக நீ புகழுக்கும் மகத்துவத்திற்கும் உரியவன்)

தொடர்ந்து இந்த துஆவை ஓத வேண்டும்:

| | |
|---|---|
| அல்லாஹு ம் இன்னீ அஊது பிக்க | اَللّٰهُمَّ اِنِّى اَعُوْذُ بِكَ |
| மின் அதாபி ஜஹன் னம | مِنْ عَذَابِ جَهَنَّمَ |

| | |
|---|---|
| வ மின் அதாபில் கப்றி | وَمِنْ عَذَابِ الْقَبْرِ |
| வ மின் ஃபித்னத்தில் மஹ்யா வல் மமாத்தி | وَمِنْ فِتْنَةِ الْمَحْيَا وَالْمَمَاتِ |
| வ மின் ஃபித்னத்தில் மஸீஹித் தஜ்ஜால் | وَمِنْ فِتْنَةِ الْمَسِيحِ الدَّجَّالِ |

(பொருள்: யா அல்லாஹ், நரகத்தின் வேதனையில் இருந்தும் மண்ணறையின் வேதனையில் இருந்தும் வாழ்க்கை மற்றும் மரணத்தின் குழப்பத்தில் இருந்தும் தஜ்ஜாலின் குழப்பத்தில் இருந்தும் நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்)

இதன் பிறகு இம்மை - மறுமை நலன்களில் விரும்பியவற்றை இறைவனிடம் கேட்டுப் பிரார்த்திக்க வேண்டும்.

22. பிறகு வலது புறமும் இடது புறமும் முகத்தைத் திருப்பி அஸ்ஸலாமு அலைக்கும் வ ரஹ்மத்துல்லாஹ் என்று ஸலாம் கொடுக்க வேண்டும்.

23. மூன்று ரக்அத் தொழுகையாகவோ நான்கு ரக்அத் தொழுகையாகவோ இருந்தால் - **அஷ்ஹது அ(ன்)ல்லா இலாஹ இல்லல்லாஹு வ அஷ்ஹது அன்ன முஹம்மதன் அப்துஹு வரஸூலுஹ்** என்பதுடன் நிறுத்திக் கொள்ள வேண்டும்.

24. பிறகு அல்லாஹு அக்பர் என்று சொல்லிக்கொண்டு எழுந்திருக்க வேண்டும். அப்பொழுது புஜங்களுக்கு நேராக கைகளை உயர்த்த வேண்டும்.

25. பிறகு எஞ்சிய தொழுகைகளை - இரண்டாவது ரக்அத்தைப் போன்று தொழுதிட வேண்டும். ஆயினும் இப்போது ஃபாத்திஹா அத்தியாயத்தை ஓதுவதுடன் நிறுத் திக் கொள்ள வேண்டும்.

26. பிறகு தவர்ருக்கில் அமர்ந்திட வேண்டும். அதாவது வலதுகால் பாதத்தை நட்டு வைத்து இடதுகால் பாதத்தை வலது கரண்டைக் காலின் கீழ் வெளிப்படுத்தி புட்டத்தைப் பூமியில் வைத்து அமர்ந்திட வேண்டும். இரண்டு கைகளையும் தொடைகளின் மீது வைக்க வேண்டும். முதல் அத்தஹிய் யாத்தில் வைத்திருந்தது போன்று!

27. இந்த அமர்வில் அத்தஹிய்யாத்தையும் ஸலவாத் தையும் முழுமையாக ஓத வேண்டும்.

28. பிறகு வலது புறமும் இடது புறமும் முகத்தைத் திருப்பி அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மத்துல்லாஹ் என்று ஸலாம் கொடுக்க வேண்டும்.

## أَشْيَاءٌ مَكْرُوْهَةٌ فِى الصَّلَاةِ

## தொழுகையில் மக்ரூஹ் ஆன (வெறுக்கத்தக்க) விஷயங்கள்

1. தலையைத் திருப்புவது அல்லது பார்வையைத் திருப்பு வது தொழுகையில் மக்ரூஹ் ஆகும். ஆனால் வானத்தை நோக்கி பார்வை செலுத்துவது ஹராம் ஆகும்.

2. வீணான செயலும் தேவையின்றி அசைவதும் தொழுகையில் மக்ரூஹ் ஆகும்.

3. ஏதேனும் கனமான பொருளையோ பார்வையைப் பறிக்கும் வகையில் சாயம் பூசப்பட்ட பொருளையோ வைத்திருப்பது தொழுகையில் மக்ரூஹ் ஆகும்.

4. இடுப்பில் கைவைத்துக்கொண்டு நிற்பது மக்ரூஹ்.

أَشْيَاءٌ مُبْطِلَةٌ لِلصَّلَاةِ

## தொழுகையை முறிக்கும் விஷயங்கள்

1. வேண்டுமென்றே பேசுவது. அது குறைவாக இருந்தாலும் தொழுகையை முறித்துவிடும்.

2. உடல் முழுவதையும் கிப்லாவை விட்டுத் திருப்புவது தொழுகையை முறித்துவிடும்.

3. பின் துவாரத்தின் வழியாக காற்றுப் பிரிந்தால் தொழுகை முறிந்துவிடும். உளுவை அல்லது குளிப்பைக் கடமையாக்கும் எல்லாக் காரியங்களின் மூலமும் தொழுகை முறிந்துவிடும்.

4. தேவையில்லாது தொடர்படியான - அதிகப்படியான அசைவு களினாலும் தொழுகை முறிந்துவிடும்.

5. சிரிப்பு - அது குறைவாக இருந்தாலும் தொழுகை முறிந்து விடும்.

6. ருகூஉ, ஸுஜூது, நிற்பது, அமர்வது இவற்றில் ஒன்றை வேண்டுமென்றே அதிகமாக்குவது தொழுகையை முறித்து விடும்.

7. வேண்டுமென்றே இமாமை முந்திக்கொண்டு செயல் படுவது தொழுகையை முறித்துவிடும்.

# أَشْيَاءٌ مِنْ أَحْكَامِ سُجُوْدِ السَّهْوِ فِى الصَّلَاةِ

# ஸஜ்தா ஸஹ்வு (மறதிக்கான ஸஜ்தா) பற்றிய சட்டங்கள்

1. ஒருவருக்குத் தொழுகையில் மறதி ஏற்பட்டு ருகூஉ அல்லது ஸுஜூது, நிலையில் நிற்பது அல்லது அமர்வது ஆகியவற்றில் ஒன்றை அதிகப்படியாகச் செய்தார் எனில், அவர் தொழுகையைப் பூர்த்தி செய்து ஸலாம் கொடுத்த பிறகு மறதிக்கான இரண்டு ஸஜ்தா செய்ய வேண்டும். மீண்டும் ஸலாம் கொடுக்க வேண்டும். எடுத்துக்காட்டாக,

ஒருவர் ளுஹர் தொழும்போது ஐந்தாவது ரக்அத்திற்கு எழுந்து விட்டார். பிறகு அவருக்கு நினைவு வந்தது அல்லது நினைவூட்டப்பட்டது எனில், தக்பீர் சொல்லாமல் அமர்வுக்கு வருவார். கடைசி அத்தஹிய்யாத்தை ஓதுவார். ஸலாம் கொடுப்பார். பிறகு இரண்டு ஸஜ்தா செய்வார். மீண்டும் ஸலாம் கொடுப்பார். இதைப்போன்றே அதிகப்படியாகச் செய்தது பற்றி தொழுகை முடிந்த பிறகே அவருக்குத் தெரிய வந்தால் மறதிக்காக இரண்டு ஸஜ்தா செய்வார். பிறகு ஸலாம் கொடுப்பார்.

2. தொழுகையை முடிப்பதற்கு முன்பாகவே மறதியாக ஒருவர் ஸலாம் கொடுத்தால் - அப்படியே தொழுகையைத்

தொடரும் வகையில் சிறிது நேரத்திலேயே அதுபற்றி அவருக்கு நினைவு வந்தது அல்லது நினைவூட்டப்பட்டது எனில், அவர் எஞ்சிய தொழுகையைப் பூர்த்தியாக்க வேண்டும். பிறகு ஸலாம் கொடுக்க வேண்டும். பிறகு இரண்டு ஸஜ்தா செய்ய வேண்டும். மீண்டும் ஸலாம் கொடுக்க வேண்டும். எடுத்துக்காட்டாக,

ஒருவர் ளுஹர் தொழுதார். மறதியாக மூன்றாவது ரக்அத்தில் ஸலாம் கொடுத்து விட்டார். பிறகு அது பற்றி நினைவு வந்தது., அல்லது நினைவுபடுத்தப்பாட்டார் எனில், அவர் நான்காவது ரக்அத் தொழ வேண்டும். ஸலாம் கொடுக்க வேண்டும். பிறகு இரண்டு ஸஜ்தா செய்ய வேண்டும். மீண்டும் ஸலாம் கொடுக்க வேண்டும். இது பற்றி வெகு நேரத்திற்குப் பிறகே அவருக்கு நினைவு வந்தது எனில், தொழுகையை முழுவதுமாகத் திருப்பித் தொழ வேண்டும்.

3. ஒருவர் முதல் அத்தஹிய்யாத்தை அல்லது அது போன்ற கடமையான ஒன்றை மறதியாக விட்டு விட்டார் எனில், ஸலாம் கொடுப்பதற்கு முன்பாக இரண்டு ஸஜ்தா செய்ய வேண்டும். வேறெதுவும் அவர் செய்ய வேண்டியதில்லை. அந்த நிலையை விட்டு நீங்குவதற்கு முன்பே அது பற்றி அவருக்கு நினைவு வந்தால் விடப்பட்டதை உடனே நிறைவேற்ற வேண்டும். வேறெதுவும் அவர் செய்ய வேண்டியதில்லை. ஆனால் அதற்குரிய இடத்தைக் கடந்து சென்ற பிறகு - அடுத்த கட்டத்திற்குச் செல்வதற்கு முன்பு அது அவருக்கு நினைவு வந்தது என்றால் விடப்பட்ட நிலைக்குத் திரும்பி அதை நிறைவேற்ற வேண்டும். எடுத்துக்காட்டாக,

ஒருவர் முதல் அத்தஹிய்யாத்தை மறந்து விட்டு மூன்றா வது ரக்அத்திற்காக எழுந்து நிலைக்கே வந்து விட்டார் எனில் அவர் மீண்டும் கீழே அமர வேண்டாம். ஸலாம் கொடுப்பதற்கு முன்பு மறதிக்காக இரண்டு ஸஜ்தா செய்ய வேண்டும்.

ஒருவர் அத்தஹிய்யாத்திற்காக அமர்ந்தார். ஆனால் அத்த ஹிய்யாத்தை ஓத மறந்து விட்டார். எழுந்திருப்பதற்கு முன் நினைவு வந்து விட்டது எனில், அத்தஹிய்யாத்தை ஓதி தொழுகையைப் பூர்த்தி செய்ய வேண்டும். வேறெதுவும் அவர் செய்ய வேண்டியதில்லை. இதேபோன்று- அத்தஹிய்யாத் திற்காக உட்காராமல் எழுந்து விட்டார். ஆனால் முழுமை யாக நிலையில் நிற்பதற்கு முன்பே நினைவு வந்து விட்டது எனில், அவர் கீழே உட்கார்ந்து அத்தஹிய்யாத் ஓதி தொழுகையைத் தொடர்ந்து பூர்த்தி செய்ய வேண்டும். ஆயினும் அறிஞர்கள் இவ்வாறு கூறியுள்ளனர்:

"இவர் மறதிக்காக இரண்டு ஸஜ்தா செய்ய வேண்டும். காரணம், எழுந்திருத்தல் எனும் செயலைத் தொழுகையில் அவர் அதிகப்படியாகச் செய்துள்ளார் " அல்லாஹ் மிக அறிந்தவன்.

4. இரண்டு ரக்அத் தொழுதோமா அல்லது மூன்று ரக்அத் தொழுதோமா என்று தொழுகையில் சந்தேகம் வந்து விட்டால், அப்போது என்ன செய்வது? இரண்டு ரக்அத் தொழுதது உறுதி., அதில் எந்த சந்தேகமும் இல்லை. அந்த அடிப்படையில் தொடர்ந்து எஞ்சியுள்ள ரக்அத்களையும் நிறைவேற்ற வேண்டும். ஸலாம் கொடுப்பதற்கு முன் மறதிக் கான இரண்டு ஸஜ்தா செய்து பிறகு ஸலாம் கொடுக்க வேண்டும். எடுத்துக்காட்டாக,

ஒருவர் ளுஹர் தொழுகிறார். இரண்டாவது ரக்அத் தொழும்போது சந்தேகம் வருகிறது. இது இரண்டாவது ரக்அத்தா? மூன்றாவது ரக்அத்தா? என்று! எத்தனை ரக்அத் என்று உறுதியாகத் தெரியவில்லை. அப்போது அதை இரண் டாவது ரக்அத் எனக் கணித்து தொழுகையை பூர்த்தி செய்ய வேண்டும். ஸலாம் கொடுப்பதற்கு முன் இரண்டு ஸஜ்தா செய்ய வேண்டும். பிறகு ஸலாம் கொடுக்க வேண்டும்.

5. இரண்டு ரக்அத் தொழுதோமா அல்லது மூன்று ரக்அத் தொழுதோமா என்று சந்தேகம் வந்தால் - இரண்டில் ஒன்றைக் குறித்து உறுதியான எண்ணம் இருந்தால் உறுதி யான எண்ணத்தின் அடிப்படையில் தொழுகையை அமைத்திட வேண்டும். மிகையான எண்ணம் இரண்டு ரக்அத் என்றிருந் தாலும் சரி, மூன்று ரக்அத் என்றிருந்தாலும் சரியே! ஸலாம் கொடுத்த பிறகு மறதிக்காக இரண்டு ஸஜ்தா செய்ய வேண்டும். மீண்டும் ஸலாம் கொடுக்க வேண்டும். எடுத்துக் காட்டாக,

ஒருவர் ளுஹர் தொழுகிறார்., இரண்டாவது ரக்அத்தில் சந்தேகம் ஏற்படுகிறது. அது இரண்டாவது ரக்அத்தா அல்லது மூன்றாவது ரக்அத்தா என்று! ஆனால் மூன்றாவது ரக்அத் தான் என்பதில் சற்று உறுதியான எண்ணம் இருக்கிறது எனில், அதை மூன்றாவது ரக்அத் எனக் கணித்துத் தொழுகையைப் பூர்த்தி செய்ய வேண்டும். ஸலாம் கொடுத்த பிறகு மறதிக்கான இரண்டு ஸஜ்தா செய்ய வேண்டும். மீண்டும் ஸலாம் கொடுக்க வேண்டும்.

தொழுது முடித்த பிறகு சந்தேகம் வந்தால் தொழுகை யில் ஏதோ தவறு நடந்து விட்டது என்று உறுதியாகத் தெரிய வேண்டும்., அப்படி உறுதியாகாமல் சந்தேகமாகவே இருந்தால் - அந்தச் சந்தேகம் அதிகமாகவே இருந்தாலும் சரியே - அதைப் பொருட்படுத்த வேண்டியதில்லை.

## كَيْفَ يَتَطَهَّرُ الْمَرِيْضُ ؟

## நோயாளி சுத்தம் செய்வது எப்படி?

1. தண்ணீரைக் கொண்டு சுத்தம் செய்வது நோயாளி மீது கடமையாகும். சிறு துடக்கு எனில், உளூ செய்ய வேண்டும். பெருந்துடக்கு எனில் குளித்திட வேண்டும்.

2 நோயாளி நோயின் காரணமாக தண்ணீரைப் பயன்படுத்த முடியவில்லை என்றாலோ நோய் அதிகமாகும் அல்லது குண மாகத் தாமதமாகும் எனும் அச்சத்தினால் தண்ணீர் கொண்டு சுத்தம் செய்ய முடியவில்லை என்றாலோ தயம்மும் செய்ய வேண்டும்.

3. தயம்மும் செய்யும் முறை யாதெனில், சுத்தமான தரையை இரண்டு கைகளைக்கொண்டு ஒரு தடவை அடிக்க வேண் டும். அடித்த கைகளால் முகம் முழுவதையும் தடவ வேண் டும். பிறகு இரு மணிக்கட்டுகளை ஒன்றைக் கொண்டு மற்றொன்றைத் தடவ வேண்டும்.

4. சுயமாக சுத்தத்தை மேற்கொள்ள அவரால் இயல வில்லையானால் வேறொருவர் அவருக்கு உளூ அல்லது தயம்மும் செய்து வைப்பார்.

5. சுத்தம் செய்ய வேண்டிய பகுதிகளில் சிலவற்றில் காயம் இருந்தால் தண்ணீரால் அதைக் கழுவ வேண்டும். தண்ணீரால் கழுவுவது தீங்கு அளிக்கும் என்றிருந்தால் தண் ணீரால் அதைத் தடவ வேண்டும். அதாவது கையைத் தண்ணீரில் நனைத்து காயத்தின் மீது தடவ வேண்டும். அப்படிச் செய்வதனாலும் தீங்கு ஏற்படும் என்றிருந்தால் அதற் குப் பகரமாக தயம்மும் செய்ய வேண்டும்.

6. சுத்தம் செய்ய வேண்டிய பகுதிகள் சிலவற்றில் முறிவு ஏற்பட்டு துணிவைத்தோ பட்டை வைத்தோ கட்டப்பட்டிருந் தால் அதைக் கழுவுவதற்குப் பதிலாக தண்ணீர் கொண்டு தடவ வேண்டும். அப்படித் தடவுவது கழுவுவதற்குப் பதிலா கும் என்பதால் தயம்மும் செய்ய வேண்டிய தேவை இல்லை.

7. சுவர் மீதோ புழுதி படிந்துள்ள சுத்தமான பொருள் மீதோ தயம்மும் செய்வது கூடும். பெயின்ட் போன்ற மண் ணினம் சாராத பொருளால் சுவர் பூசப்பட்டிருந்தால் அதன் மீது தயம்மும் செய்யக்கூடாது. அதில் புழுதி படிந்திருந்தால் செய்யலாம்.

8. மண்ணிலோ சுவரிலோ புழுதி படிந்த ஏதேனும் பொரு ளிலோ தயம்மும் செய்ய முடியவில்லையானால் ஒரு பாத்திரத் தில் அல்லது கைத்துண்டில் மண்ணை வைத்து அதில் தயம்மும் செய்வதால் குற்றமேதுமில்லை.

9. ஒரு தொழுகைக்காக தயம்மும் செய்து மற்றொரு தொழுகையின் நேரம் வரையில் அந்த சுத்தத்துடன் இருந்தால் அந்த தயம்மும் கொண்டு அந்தத் தொழுகையைத் தொழலாம். இரண்டாவது தொழுகைக்கென புதிதாக தயம்மும் செய்ய வேண்டியதில்லை. ஏனெனில் அவர் முதல் தயம்மும் உடைய சுத்தத்தில் நீடிக்கிறார். அதை முறிக்கக் கூடிய எதையும் அவர் செய்திடவில்லை.

10. அசுத்தங்களை நீக்கி தன் உடலைச் சுத்தம் செய்வது நோயாளி மீது கடமையாகும். அவரால் இயலவில்லையானால் அப்படியே தொழலாம். அந்தத் தொழுகை நிறைவேறிவிடும். திருப்பித் தொழவேண்டியதில்லை.

11. சுத்தமான ஆடைகள் கொண்டு தொழுவது நோயாளி மீது கடமை. அவருடைய ஆடைகள் அசுத்தமாகிவிட்டால் அவற்றைத் துவைப்பதோ அவற்றைக் களைந்து விட்டு சுத்தமான ஆடைகள் அணிவதோ கடமையாகும். அது சாத்தியமில்லை எனில் அப்படியே தொழலாம். அவரது தொழுகை நிறைவேறிவிடும். திருப்பித் தொழ வேண்டியதில்லை.

12. சுத்தமான பொருளின் மீது தொழுவது நோயாளி மீது கடமை. அந்த இடம் அசுத்தமாகி விட்டால் அதைக் கழுவி சுத்தம் செய்வது அல்லது அதை மாற்றிவிட்டு சுத்தமான பொருளைக் கொண்டு வருவது அல்லது சுத்தமான விரிப்பை அதன் மீது வரிப்பது கடமையாகும். அதெல்லாம் சாத்தியமில்லை எனில் அப்படியே தொழலாம். அவரது தொழுகை நிறைவேறி விடும். திருப்பித் தொழ வேண்டியதில்லை.

13. சுத்தம் செய்யவில்லை என்பதால் தொழுகையை நேரப்படி தொழாமல் பிற்படுத்துவது நோயாளிக்குக் கூடாது.

மாறாக முடிந்தவரை சுத்தத்தை மேற்கொள்ள வேண்டும். நேரப்படி தொழ வேண்டும். அவரது உடலிலோ உடையிலோ இடத்திலோ அசுத்தம் இருந்து அதைச் சுத்தம் செய்ய இயல வில்லை என்றாலும் சரியே!

## كَيْفَ يُصَلِّى الْمَرِيْضُ؟

## நோயாளி தொழுவது எப்படி?

1. நோயாளி கடமையான தொழுகையை நின்று கொண்டு தொழுவது கடமையாகும். சற்று குனிந்தவாறு நின்று தொழுதாலும் சரி. சுவரில் சாய்தோ அல்லது கைத் தடி மீது ஊன்றியவாறு நின்று தொழுதாலும் சரி!

2. நிற்பதற்கு இயலவில்லை எனில் உட்கார்ந்து கொண்டு தொழவேண்டும். நிற்பதற்குப் பகரமாகவும் ருகூஉ-வின் போதும் சம்மணமிட்டு உட்காருவது சிறந்ததாகும்.

3. உட்கார்ந்து தொழுவதற்கு இயலவில்லை எனில் கிப்லாவை முன்னோக்கி ஒருக்களித்துப் படுத்தவாறு தொழ வேண்டும். வலது பக்கமாகப் படுப்பது சிறந்ததாகும். கிப் லாவை முன்னோக்குவது சாத்தியமில்லை எனில், எந்நிலை யில் அவர் படுத்திருக்கிறாரோ அதேநிலையில் தொழலாம். அவரது தொழுகை நிறைவேறிவிடும். திருப்பித் தொழ வேண்டியதில்லை.

4. ஒருக்களித்துப் படுத்தவாறு தொழுவதற்கு இயல வில்லை எனில் இரண்டு கால்களையும் கிப்லாவை நோக்கி நீட்டி மல்லாந்து படுத்துக்கொண்டு தொழ வேண்டும். முகம் கிப்லாவை முன்னோக்கி இருக்கும் பொருட்டு தலையைச் சற்று உயர்த்தி வைப்பது சிறந்ததாகும். இரண்டு கால்களை

யும் கிப்லாவை நோக்கி வைத்திருக்க முடியவில்லை எனில், எப்படிச் சாத்தியமோ அப்படித் தொழ வேண்டும். திருப்பித் தொழ வேண்டியதில்லை.

5. நோயாளி தொழுகையின்போது ருகூஉ-வும் ஸுஜூதும் செய்வது கடமை. அது இயலவில்லை எனில் ருகூவுக்கும் ஸுஜூதுக்கும் பதிலாக தலையைக் கொண்டு சைக்கினை செய்ய வேண்டும். ஸுஜூதில் ருகூஉ-வைவிட சற்று அதிகம் தலையைத் தாழ்த்தி வைத்திருக்க வேண்டும். ஸுஜூது செய்ய இயலாமல் ருகூஉ மட்டும்தான் முடியும் என்றிருந்தால் ருகூஉ மட்டும் செய்யவேண்டும். ஸுஜூதுக்கு சைக்கினை செய்ய வேண்டும். ருகூஉ செய்ய இயலாமல் ஸுஜூது மட்டும்தான் செய்ய முடியும் என்றிருந்தால் ஸுஜூது மட்டும் செய்யலாம். ருகூவுக்கு சைக்கினை செய்ய வேண்டும்.

6. ருகூவுக்கும் ஸுஜூதுக்கும் தலையால் சைக்கினை செய்ய இயலவில்லை எனில் இரண்டு கண்களால் சைக்கினை செய்ய வேண்டும். ருகூவுக்குக் கண்களைச் சிறிது நேரம் மூடிக்கொள்ள வேண்டும். ஸுஜூதுக்கு அதிக நேரம் மூடிக் கொண்டிருக்க வேண்டும். ஆனால் நோயாளிகள் சிலர் செய்வது போன்று விரலைக்கொண்டு சைக்கினை செய்வது சரியல்ல. குர்ஆன் -ஹதீஸிலும் இதற்கு எந்த ஆதாரமும் நான் காணவில்லை. அறிஞர்களில் கூற்றிலும் ஆதாரம் அறியேன்.

7. தலையைக்கொண்டு சைக்கினை செய்வதற்கும் கண்களைக்கொண்டு சைக்கினை செய்வதற்கும் இயல வில்லை எனில் மனதால் தொழுவார். தக்பீர் சொல்வார். குர்ஆன்

வசனங்களை ஓதுவார். மேலும் ருகூஉ, ஸுஜூது, நிலை மற்றும் அமர்வு ஆகியவற்றை மனதில் எண்ணிக்கொள்வார். ஒவ்வொரு மனிதருக்கும் அவரவரது எண்ணப்படி கூலி உண்டு.

8. நோயாளி ஒவ்வொரு தொழுகையையும் உரிய நேரத்தில் தொழுவதும், தொழுகையில் கண்டிப்பாகச் செய்ய வேண்டிய அம்சங்களில் அவரால் முடிந்த அனைத்தையும் செய்வதும் கடமையாகும். ஒவ்வொரு தொழுகையையும் அந்தந்த நேரத்தில் நிறைவேற்றுவது அவருக்குச் சிரமமாக இருந்தால் ளுஹர் தொழுகையையும் அஸர்த் தொழுகையையும் ஒரே நேரத்தில் தொழலாம். மஃக்ரிப் தொழுகையையும் இஷா தொழுகையையும் ஒரே நேரத்தில் தொழலாம். அஸர் தொழுகையை முற்படுத்தி ளுஹர் தொழுகையுடன் சேர்த்தும் இஷாதொழுகையை முற்படுத்தி மஃக்ரிப் தொழுகையுடன் சேர்த்தும் தொழலாம். அல்லது ளுஹர் தொழுகையைப் பிற்படுத்தி அஸர் தொழுகையுடன் சேர்த்தும் மஃக்ரிப் தொழுகையைப் பிற்படுத்தி இஷா தொழுகையுடன் சேர்த்தும் தொழலாம்-அவருடைய வசதியைப் பொறுத்து! ஆனால் ஃபஜ்ர் தொழுகையை - அதற்கு முன்னுள்ள தொழுகையுடனோ பின்னுள்ள தொழுகையுடனோ சேர்த்துத் தொழப்பட மாட்டாது.

9. நோயாளி பயணியாக இருந்தால் அவருக்கு வெளி ஊரில் சிகிச்சை அளிக்கப்படுகிறதென்றால், நான்கு ரக்அத் தொழுகையை இரண்டு ரக்அத் ஆகச் சுருக்கித் தொழலாம். அதாவது ளுஹர், அஸர், இஷா ஆகிய தொழுகைகளை இரண்டு இரண்டு ரக்அத்தாக தொழ வேண்டும்., ஊர் திரும்பும் வரை! பயண காலம் நீண்டிருந்தாலும் குறைவாக இருந்தாலும் சரியே!

# رسائل فى

# الطهارة والصلاة

سماحة الشيخ عبد العزيز بن عبد الله بن باز رحمه الله

سماحة الشيخ محمد بن صالح العثيمين رحمه الله

ترجمة

علي ابو خالد العمريِ

مراجعة

سيد محمد بن محمد صالح

كتب الجاليات ٥٢/٤



# رسائل في الطهارة والصلاة

لسماحة الشيخين

## عبدالعزيز بن عبدالله بن باز
## ومحمد بن صالح العثيمين

- رحمهما الله -

ترجمة

لي أبوخالد العمري

مراجعة

سيد محمد بن محمد صالح

١٣٠-١٠-١٩ تاميلي

المكتب التعاوني للدعوة والإرشاد وتوعية الجاليات بالسلي
ص.ب. ١٤١٩ الرياض ١١٤٣١ هاتف ٢٤١٠٦١٥ ناسوخ ٢٣٢ - ٢٤١٤٤٨٨
البريد الالكتروني : sulay5@hotmail.com

ردمك : X-٢٦-٧٨٣-٩٩٦٠